டிப்பிஸ் டீ டிப்பிஸ் டோய்
வருவீர்
டிப்பிலாண்ட்

Dipy's
ORANGE SQUASH




ஒப்பில்லே இது டிப்பிஸ் டோய்!

# அந்துலேக்கு எழுதுகிறார் அஞ்சையா!

அன்புள்ள அந்துலேஜி!

நான் ஆந்திரப் பிரதேச முதல்வர் பதவியி லிருந்து ராஜிநாமாச் செய்துவிட்டேன் என்பதை அறிந்திருப்பீர்கள். எனது துயரை யாரிடமாவது பகிர்ந்து-கொள்ளவில்லை என்றால் எனக்குப் பைத்தியமே பிடித்து விடும்போல் இருக்கிறது. அதனால்தான் உங்களுக்கு எழுதுகிறேன். என் துக்கத்தைப் பகிர்ந்து கொள்ள உங்களை விடச் சிறந்த நபரை என்னால் தேர்ந்தெடுக்க முடியவில்லை.

என்னை வெளியேற்றியது பெரிய விஷயமில்லை. அதை எப்படிச் செய்தார்கள் என்று பார்க்கும்போதுதான் நெஞ்சு வெடித்து விடும் போலிருக்கிறது! பிரதமரைச் சந்திக்கத் தில்லிக்கு வரச் சொன்னார்கள். ஆனால் பிரதமருக்கு என்னைச் சந்திக்க நேரம் கிடைக்கவில்லை. நிதி அமைச்சரைத்தான் பார்க்க வேண்டியிருந்தது. அவரும் ரொம்ப பிஸி. ''பதவியை விட்டு வெளியேறு'' என்று எனக்கு உத்தரவிட மட்டும்தான் அவருக்கும் நேரம் இருந்தது.

ஆனால் முன்பு உங்களை இதைவிட ரொம்ப கௌரவமாக நடத்தியிருக்கிறார்கள். அதனால்தான் உங்களிடம் யோசனை கேட்கத் தோன்றியது. பிழைக்கும் வழி பற்றிக் கொஞ்சம் சொல்லிக் கொடுங்களேன், ப்ளீஸ்!

உங்களைப் பற்றிப் பெரிய பெரிய பிரும்மாண்டமான குற்றச் சாட்டுக்கள் பத்திரிகைகளில் வந்தன. ஆனால் என்னைப் பற்றியோ விசேஷமான குற்றச்சாட்டாக ஏதுமில்லை. எல்லா இ. காங்கிரஸ் முதல்வர்களையும்பற்றி எல்லாப் பத்திரிகைகளும் எழுதும் வழக்கமான குற்றச் சாட்டுக்கள்தான். இவற்றைப் பிரதமரும் அவரது மூன்று பிள்ளைகளான, ஆல் இந்தியா ரேடியோ, தூரதர்சன், ராஜீவ் ஆகியோரும் மறுத்து விடுவதும் சகஜம்தான்.

இருந்தாலும் பாருங்கள், அன்றைய நிதி அமைச்சர் நாடாளு மன்றத்தில் உங்கள் செயல்களை நியாயப்படுத்திப் பேசினார்; இன்றைய நிதி அமைச்சரோ என்னைப் பார்த்து 'பதவி துறந்து வெளியேறு' என்று உத்தரவிடுவதுடன் நிறுத்திக் கொண்டார்!

ஏன் இந்தப் பாரபட்சம் என்று எனக்குப் புரியவேயில்லை!



ஏராளமான நன்கொடைகளைப் பெற்றுக் கொண்டு அதன் அடிப்படையில் நான் சலுகைகளை விநியோகித்தேன் என்று எந்தப் பத்திரிகையும் என் மேல் குற்றம் சுமத்தாததால்தான் நான் இப்படி யெல்லாம் அவதிப்பட வேண்டி யிருக்கிறதோ என்னமோ? அப்படியானால் இந்த அருண் ஷோரியைப் போல அன்பற்றவரைப் பார்க்கவே முடியாது என்றுதான் சொல்வேன். 'ஐயோ பாவம்' என்று பரிதாபப்பட்டாவது என் மீதும் இரண்டு பயங்கரக் குற்றச்சாட்டுக்களை அவர் சுமத்தி இருக்கக் கூடாதா? நான் எப்படி யெல்லாம் பணம் சேர்த்தேன் என்று அவர் கொஞ்சமாவது எழுதியிருந்தால் பிரதமர் இப்படி கருணை இன்றி என்னைப் பட்டுக் கத்தரித்தாற் போல் வெட்டி விட்டிருக்க மாட்டார் அல்லவா?

உங்கள்மீது மகாராஷ்டிர உயர்நீதி மன்றத்தில் வழக்கு தொடுக்கப்பட்ட போது பிரதமர் உங்களைப் பாதுகாக்க முற்பட்டு, 'லஞ்ச ஊழல் உலகெங்கும் காணப்படுகிற விஷயம்' என்றார். இந்த மோசமான உலகுக்கு அனுசரணையாக நீங்கள் நடந்துகொள்வதைச் சொல்லாமல் சொன்னார்.

என்மீது எந்த விதமான வழக்கும் தொடுக்கப்படவில்லை. என்றாலும் எனக்குக் கல்தா கொடுக்கிறார்கள்! ஒரு வேளை நானும் சில வழக்குகள் என் மீது சுமத்தப்படுகிற மாதிரி நடந்து கொண்டிருக்கவேண்டுமோ? அப்போது பிரதமர் என்னையும் பாதுகாக்க முற்பட்டு, எதிர்க் கட்சி, நீதித் துறை இரண்டையும் மட்டம் தட்டி விருப்பார் அல்லவா?

என்னை வெளியேற்றுவதற்குக் கட்சிக்குள் நிலவும் உட்பூசல் ஒரு காரணம் என்கிறார்கள். உட்பூசல் இருப்பது என்னவோ உண்மைதான். ஆனால் ஒரு முதல்வருக்குக் கல்தா கொடுக்க இந்த ஒரு காரணம் மட்டுமே போதும் என்றால் நம் கட்சியைச் சேர்ந்த ஒரு முதல்வர்கூட ஒரு நாளைக்கு மேல் எந்த மாநிலத்திலும் பதவியில் நீடிக்க முடியாதே!

எந்த மாநிலமானாலும் என்ன, நமது கட்சியில் எப்போதுமே இரு வித எம்.எல்.ஏ.க்கள்தான் உண்டு. மந்திரிகள், அதிருப்தியாளர்கள் என்று இரண்டே பிரிவுதான். உங்கள் மாநிலத்திலும் உங்களைப் 'பிடிக்காத அதிருப்தியாளர்கள் இருக்கத்தானே செய்தார்கள்? ஆனால் உங்கள் விஷயத்தில் மட்டும் அதிருப்தியாளர்கள் வாயை மூடிக் கொண்டு இருக்க வேண்டும் என்று பிரதமர் உத்தரவிட்டாரே அது எப்படி? 'முதல்வரை எதிர்த்துக் கோஷ்டி சேர்த்தால் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும்' என்று கூட எச்சரிக்கை பிறந்ததே அது எவ்வாறு!

என் விஷயத்திலோ ஒழுங்கு நடவடிக்கை என் மீது மட்டும்தான் எடுக்கப்பட்டது! ஆந்திர இ. காங்கிரஸ் அதிருப்தியாளர்கள் நேர்மையானவர்கள் என்று பிரதமர் கருதி யிருக்க முடியாது. நம கட்சியைச் சேர்ந்த யாரையுமே நேர்மையாளன் என்று பிரதமர் சந்தேகித்திருக்கவே முடியாது! இவ்வாறிருக்க நம் இருவர் விஷயத்திலும் இரு விதமாகப் பிரதமர் நடந்துகொள்ளக் காரணம்தான் என்ன? தயவு செய்து அந்த ரகசியத்தைக் கொஞ்சம் சொல்லுங்களேன்!

டில்லியின் உத்தரவைச் சிரமேற் கொண்டு நான் ராஜீவை வரவேற்க, ஹைதராபாத் விமான நிலையத்தில் எல்லா ஏற்பாடுகளையும் செய்து வைத்திருந்ததுதான் எனக்கு ஏற்பட்ட இந்தத் துயருக்குக் காரணமோ? நான் செய்ததெல்லாம் அன்னையையும் இந்த நாட்டின் எதிர்கால நம்பிக்கைத் தாரகையையும் திருப்திப்படுத்தத்தானே? என்னை அனைவர் முன்னிலையிலும் ராஜீவ் அவமானப்படுத்திய போதுகூட நான் ஆட்சேபிக்கவில்லையே? அழத்தானே செய்தேன்!

நீங்கள் என் நிலையில் இருந்திருந்தால் என்ன செய்திருப்பீர்கள்? அல்லது ராஜீவ்தான் என் நிலையில் நீங்கள் இருந்திருந்தால் என்ன செய்திருப்பார்? ஒரு வேளை கோபத்தை வெளிக் காட்டாமலே இருந்திருப்பாரோ?

ஆமாம், இப்போது நினைவு வருகிறது. குண்டுராவ் பெங்களூரில் இதைவிடப் பிரமாதமாக தாம்தூம் வரவேற்பு அளித்தபோது அவரை ராஜீவ் மட்டம் தட்டவில்லையே? இது விஷயத்தில் நான் குண்டுராவின் யோசனைகளைக் கேட்டுப் பெறுவது நல்லது என்று தோன்றுகிறது. சீக்கிரமே அவரும் முன்னாள் முதல்வர்கள் கோஷ்டியில் நம்மில் ஒருவராக விளங்குவார். அப்போது சாவகாசமாக அவரிடம் பேசிக் கொள்கிறேன்.

நீங்கள் பதவியை விட்டு விலகியவுடன் மகாராஷ்டிர மாநில நீர்ப்பாசன அபிவிருத்தி கார்ப்பரேஷன் தலைவர் பதவி தங்களை வந்தடைந்தது. ஆனால் எனக்கு அந்த மாதிரி பதவி ஏதும் கிடைக்கவில்லையே? ஏதோ மந்திரி சபையில் சேர்த்துக்கொள்ளப் போவதாக வாக்களித்திருப்பதோடு சரி.

ஆந்திர சட்ட சபை, டில்லி உத்தரவின் பேரில் ஒத்தி வைக்கப் பட்டதும், எதிர்க் கட்சியினரே எனக்கு அனுதாபம் காட்டி அன்பாகப் பேசினர் என்றால், என் நிலைமை எவ்வளவு பரிதாபகரமானது பாருங்கள்!

தயவு செய்து பதில் போடுங்கள். எனக்கு ஆறுதல் சொல்லுங்கள்.

நீங்கள் உங்கள் புதுப் பதவியைத் திறம்பட நிர்வகிப்பீர்கள் என்பதில் எனக்குச் சந்தேகமே இல்லை. சிமெண்ட் உறுதி பெற தண்ணீர் கட்ட வேண்டும். அதனால்தானே உங்களை நீர்ப்பாசன கார்ப்பரேஷன் தலைவராக்கி யிருக்கிறார்கள்!

அன்புடன்,
அஞ்சையா

(புகைப்படம்:
மேலட்டை வண்ணப்படம்
உத்ரா)

**கா**ஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை மதத்தின் பெயரால் சண்டை பூசல்கள் — இது நீங்க என்ன வழி?

''தியானம் — யோகம் இவைதான்'' என்கிறார் யோகி வைத்தியநாதா. ''மத உணர்ச்சி மக்களை வேறுபடுத்துகிறது யோக மார்க்கம் ஒன்றுபடுத்துகிறது'' என்கிறார் இவர்.

'ஒன்றே இறைவன் ஒருவனே தேவன்' என்ற உணர்வை யோக மார்க்கம் வளர்ப்பதுடன் உடல் ஆரோக்கியத்தையும் பேணிக் காக்கிறது. மனோ பலத்தையும் பெருக்குகிறது. மும்மடங்கு லாபம்.

''நமது பழைய மதச் சடங்குகளை நான் குறை கூற மாட்டேன். என்றாலும் நவீன காலத்துக்கு ஏற்ப, விஞ்ஞான வளர்ச்சிக்கு ஒப்ப நமது அணுகு முறைகளும் மாறித் தானே ஆக வேண்டும்?'' என்று வினா எழுப்பும் வைத்தியநாதா, பதிலும் சொல்கிறார்: ''யோக மார்க்கம்தான் விஞ்ஞானரீதியாக மனிதனை இறைவனுடன் இணைக்கிறது: இளம் தலைமுறையினரையும் ஈர்க்கிறது.''

சென்னை உயர்நீதி மன்றத்தில் வக்கீலாயும், டெல்லி இந்தியன் எக்ஸ்பிரஸில் துணை ஆசிரியராகவும் இருந்தவர் வைத்தியநாதன். ஆனாலும் கடந்த இருபது வருடமாய் இவரது சிந்தனை, செயல் எல்லாம் யோகம், தியானம் பற்றியதுதான். இது குறித்து இரு புத்தகங்கள் எழுதியுள்ளார்.

தமிழக பள்ளி மாணவ மாணவியர்க்கு யோகாசன தியான பயிற்சிகள் சொல்லித் தர தமிழக அரசின் கல்வித் துறை இவரை நியமித்துள்ளது. இதுவரை பயனடைந்த மாணவ, மாணவியர் இரண்டு லட்சம். நம் நாட்டின் யோக, தியான முறைகளால் பெரிதும் கவரப்பட்டு வரும் அயல் நாட்டினருக்கு அப்பயிற்சிகள் அளிக்கும்படி கற்றுலா வளர்ச்சி நிறுவனம் இவரைக் கேட்டுக் கொண்டு இருக்கிறது. இவரது யோக மார்க்கத்தில் உள்ளடங்கிய தத்துவம் என்ன?

''உடலின் பல பாகங்களிலும் மின் சக்தி உள்ளடங்கியிருக்கிறது. இதை 'பயோ 'கரண்ட்' என்கின்றனர். இதைப் புகைப் படமும் எடுத்திருக்கிறது. நவீன விஞ்ஞானம். 'க்ரிலியன் ஃபோடோகிராஃபி' என்று இதற்குப் பெயர். குண்டலினி சக்தியை எழுப்பி இந்த பயோ கரண்டடை ஊக்குவிக்கலாம்.

''பூஜை புனஸ்காரங்கள் மேல் மனத்தை மட்டுமே தொடுகின்றன; ஆழ்மனம் கட்டுப்பட சுத்த தியானப் பயிற்சி தேவை.

''திருமூலர் சொல்லாதவை அல்ல; நவீன விஞ்ஞானம் மெய்ப்பிக்கிறது'' என்கிறார் யோகி.

இந்தியாவைப் பற்றி நூல் எழுத முற்பட்ட ஓர் இத்தாலியர் யோகம், தியானம் பற்றிய கருத்துக்கள் அறிய இவரை வந்து சந்தித்தார். இவரைச் சந்திக்கும்படி அந்த இத்தாலியருக்கு யோசனை கூறியவர் நம் பிரதமர்.

**-எஸ். சந்திரமௌலி**

படம்: ரமணி





மனத்தால் நினைத்தால்
இனிப்பதென்ன

கொணர்க்! கொணர்க்!
கொணர்க் டிவி தான்.
ஏனெனில் கொணர்க்
மட்டுமே பழைய கவிதை
களையும் புதிய நினைவு
களையும் ஒருங்கே அளிக்க
வல்லது.

கற்பனைகளில் சுகம் சுகம்
கண்டதென்னவோ நிதம்
நிதம்....

கொணர்க் BEL, HAL
போன்ற எலக்ட்ரானிக்
நிபுணர்களின் உதவி

**ஒரே நாள் உனை நான்**
**நிலாவில் பார்த்தது**
**உலாவும் உன் இளமைதான்**
**ஊஞ்சலாடுது...**



EP-OSIC-127/82 tam.

கொண்டு தயாரிக்கப்
படுவதால், நாள் தவறாது
நிதம் நிதம் நீங்கள் டிவி
காண்பது உறுதி.

பஞ்சணை பாடலுக்கு பல்லவி

2 வருட உத்தரவாதம்.
டிவியின் எல்லா பாகங்
களுக்கும், அது மட்டுமல்ல
தயாரிப்பாளரிடமிருந்து
நேரிடையாக விற்பனை
செய்யப்படுவதால் ஏறக்
குறைய ரூ.300 குறைவாக

இரவும் பகலும் இசை முழங்க

இன்றே எங்கள் விற்பனை
நிலையத்திற்கு வாருங்கள்.
கொணார்க் டிவியினை
வாங்கிச் செல்லுங்கள்.

தி ஒரிசா ஸ்மால் இண்டஸ்ட்ரீஸ்
கார்ப்பொரேஷன் லிமிடெட்
(ஒரிசா அரசு நிறுவனம்)
'ஆர்த்தி சேம்பர்ஸ்'
189, அண்ணா சாலை,
சென்னை 600 006.
தொலைபேசி : 441551

# கொணார்க் டிவி

## மலர்ந்த நினைவுகள் என்றும் மலரும்



மத்திய, மாநில பட்ஜெட்கள் வெளியாகின்றன. ஆனால் இவர்களின் பட்ஜெட்...?

## ரிக்ஷாக்காரர் ஜெகந்நாதன்

ரிக்ஷாவைப் போலவே வாழ்க்கையையும் இழுத்துச் செல்பவர். வயது 58. வருவாய் கிடைத்தாலும் கிடைக்காவிட்டாலும் ரிக்ஷா சொந்தக்காரருக்கு வாடகைப் பணம் நான்கு ரூபாய் கொடுத்துவிட வேண்டும். இரண்டு மகன்கள் இருந்தும் அவர்களுக்கு வேலையின்மையால் மகன்களுக்காக உழைக்கும் இவர் ரிக்ஷா இழுக்கும் தொழிலுக்குத் தன்னோடு முற்றுப்புள்ளி இட விரும்புகிறார். சராசரியாகத்தினமும் கிடைக்கும் ஐந்து ரூபாயில் ஐம்பது பைசா மட்டுமே இவரது சொந்தச் செலவு. எஞ்சியது குடும்பத்துக்கு. 'அது குடும்பத்துக்குப் போதுமா?' என்று கேட்டபோது, 'என்னங்க செய்யறது? என்னால் முடிஞ்சது அவ்வளவுதான்.'' எனக் கையை விரித்தாலும் குடும்பப் பொறுப்புக்களைக் கை உதறுதவர் இவர்,



✕ ஆட்டோ டிரைவர் இப்ராஹிம்

## செருப்புத் தொழிலாளி கோபாலகிருஷ்ணன்

கால் ஊனம் கொண்டவர். ஆனால் 'காலணி கலைஞர்' எனத் தானும் தன்னைப் போன்ற செருப்புத் தொழிலாளிகளும் அழைக்கப்பட வேண்டும் என விரும்பும் இவருக்கும் இவர் தந்தைக்கும் இரவு வீடு திரும்பியதும் முதல் வேலை அன்றைய வருவாய்க்குள் 'குடும்ப பட்ஜெட்' தயாரிப்பதே. பட்ஜெட்டின் முதல் 'ஐட்ட'மாகப் பள்ளி செல்லும் இவருடைய தம்பிகளுக்கும் தங்கைகளுக்கும் காலை மற்றும் மதிய உணவுக்காக ஒதுக்கீடு செய்வதுதான். எஞ்சியது இவருக்கும் இவரது தந்தைக்கும்! சேமிப்பு? 'என் உடன் பிறந்தோரின் முன்னேற்றமே எங்கள் வருங்காலத்துக்கான சேமிப்பு' என்கிறார்.



✕ சர்பத் வியாபாரி சாகுல் அமீது

✕ ரிக்ஷாக்காரர் ஜெகந்நாதன்





✕ போர்ட்டர் ஐயாசாமி

ஏர்போர்ட்டின்மேல் பிளேன் வட்டமிட்டுக் கொண்டிருந்தது. நிமிஷங்களில் அது கீழே இறங்கி 'ரன்வே'யில் ஓடவேண்டும். பைலட் கீழே பார்த்தார். 'ரன்வே'யில் ஒரு பூனையும் அதன் குட்டிகளும் இருந்தன. பைலட் உடனே 'கன்ட்ரோல் டவ'ருக்குச்செய்தி அனுப்பி அந்தப் பூனைகளை அப்புறப்படுத்தச் சொன்னார். பூனைகள் வேறு இடத்துக்குப் போனதும்தான் அவர் விமானத்தைக் கீழே இறக்கினார். அந்த விமானி திரு. சுந்தரம் இப்போது ஓய்வு பெற்று விட்டார். சென்னை நீலச்சிலுவை சங்கத்தின் தலைவராக இருக்கிறார். இந்த சங்கம் தெருவில் அனாதையாகத் திரியும் நொண்டி மாடு, குருட்டுக் குதிரை, நாய், பூனை இவற்றுக்காக ஓர் ஆசிரமம் நடத்துகிறது.

- அனிதா ராமச்சந்திரன்



### சர்பத் வியாபாரி சாகுல் அமீது

மழைக் காலங்களில் வடை பஜ்ஜி வியாபாரத்தையும் வெயில் காலங்களில் சர்பத் வியாபாரத்தையும் நடத்தும் இவரின் நிதி அமைச்சர் இவர் மனைவிதானாம். அறுநூறு ரூபாய் மூலதனத்தில் வண்டி வாங்கி வியாபாரம் நடத்தும் இவருக்குத் தினம் பத்து ரூபாய் முதல் பதினைந்து ரூபாய் வரை கிடைக்கிறதாம். இலாபமாகக் கிடைக்கும் பணத்தை அப்படியே மனைவியிடம் கொடுத்து விட அந்த இல்லத்தரசி இவரின் வருவாய்க்குள் சிக்கனமாக பட்ஜெட் தயாரித்து, தினமும் ஒரு ரூபாயை உபரியாகக் காட்டி வருகிறாராம்.

### ஆட்டோ டிரைவர் இப்ராஹிம்

ஒரு நாளைக்குப் பத்தோ ஐம்பதோ எவ்வளவு கிடைத்தாலும் எட்டு ரூபாய்க்கு மேல் செலவழிக்கக் கூடாது என்ற கொள்கையைக் கொண்டுள்ள இவர், தன்னுடைய மொத்த பட்ஜெட்டில் உணவுக்காக எழுபத்தைந்து சதவிகிதத்தை ஒதுக்கி விடுகிறார். 'சார்... இந்த மெட்ராஸிலே ஐந்து ரூபாயிலும் வாழ்க்கை நடத்தலாம். ஐந்நூறு ரூபாயிலும் வாழ்க்கை நடத்தலாம். ஏதோ நமக்குக் கிடைக்கிறதைக் கொண்டு வாழ்க்கை நடத்தணுமே தவிர, போதலேன்னு வருத்தப் படக் கூடாது' எனத் தத்துவம் பேசுகிறார்.

### போர்ட்டர் ஐயாசாமி

தினமும் ஆறு மணிக்குத் தனக்கு மட்டுமல்ல: தன் குரூப்பிலுள்ள ஐம்பது போர்ட்டர்களுக்கும் இவர் பட்ஜெட் தயாரிக்கவேண்டும். ஆம். எழும்பூரில் உள்ள போர்ட்டர்கள் ஒன்றாக இணைந்து மூன்று ஷிப்டுகளில் பணியாற்றி, வரும் மொத்த வருவாயைத் தமக்குள் சரி சமமாகப் பங்கிட்டுக்கொள்கின்றனர். இத்தகைய பங்கீட்டைச் செய்வது இவர்தான். இவருடைய பட்ஜெட்டில் மாதம் மூன்று ரூபாய் எழுபத்தைந்துகாசுகள் போர்ட்டர் லைசென்ஸ் கட்டணத்துக்காக ஒதுக்கப்பட வேண்டுமாம். பீடிக்காக இவர் ஒதுக்குவது ஐம்பது பைசா. டீயோ சாராயமோ குடிப்பது கிடையாது. ''பெண்டாட்டியை மதிச்சு சம்பாதிக்கிற காசை அவளிடம் கொடு சார். அஞ்சு பைசாவும் அஞ்சு ரூபாயாக மாறும்' என அறிவுரை வழங்குகிறார் இந்த மீசைக்காரர்.

பேட்டி, படம்: **எம்.ஏ.எஸ்.**

# Z வரிசை

✕ செருப்புத் தொழிலாளி கோபாலகிருஷ்ணன்




நீ ஒண்ணும் பயப்படாதே கண்ணு! இன்னு பண்ணிடுவான் இந்த ஐயா!
வாத்யாரே! வாத்யாரே! ஓடியாங்க!.. இன்னும் கொஞ்சம் 'கத்தி கப்டா'வோட ஓடியாங்க!
ரஷ்யா
பாரதம்
பாக்
சோவியத் உயர்மட்ட ராணுவக்குழு இந்தியாவுக்கு வருகிறது!


வந்து..சட்டம் ஒழுங்கு பிரச்னை பத்தி..
அதான் நாள் தவறாம பேப்பர்லே வந்து மானத்தை வாங்குதே! நீ வேற சொல்ல வந்துட்டியா?
ஹரி.. ஹரி.. ஹரி நான் சொல்ல வந்தது தமிழ்நாட்டைப் பத்தி மட்டும் தானுங்க!
பாங்க் கொள்ளை


என்னங்க, அப்பு விவகாரத்துலே நாடாளுமன்றத்துலே உங்களைப் போட்டுக் குடைஞ்சு எடுத்துட்டாங்களே!
என்னங்க, சாராய விவகாரத்துலே சட்ட சபையிலே உங்களைப் போட்டுத் துவட்டி எடுத்துட்டாங்களே!



# எதிர்ப்புப் பணி

"எதிர்க் கட்சிகளிடம் மக்கள் நம்பிக்கை இழந்து விட்டார்கள்'' என்கிருர் இந்திரா. தவருன கணிப்பு.

எதிர்க்கட்சிகள் திரம்படப் பணியாற்ருமலா அந்துலே பதவி இழந்தார்? அதர்மத்துக்கு ஒரு மாபெரும் தோல்வியை அளித்தவர்கள் எதிர்க்கட்சியினரே அல்லவா?

எதிர்க்கட்சியினர் எச்சரிக்கையுடன் இயங்காமலிருந்திருந்தால் ஐ. ஏ. எஸ். பயிற்சியாளர் வி. கே. சிங் முசோரி முகாமில் இன்னமும் தமது அடாவடித்தனங்களை நடத்திக்கொண்டு தானே இருப்பார்? அவரைத் தட்டிக் கேட்கத் துணிந்து அதற்காக உள்துறை அமைச்சகத்தின் அதிருப்திக்கு ஆளாகி ராஜிநாமா செய்த அப்பு என்ற நேர்மையாளரின் தியாகம் இரண்டாம் பேருக்குத் தெரியாமலே போயிருக்குமே! வி. கே. சிங் வெளியேற்றப்பட்டிருக்க மாட்டாரே! அநீதி கொக்கரித்திருக்கும்; நீதி அவமானப் படுத்தப் பட்டிருக்குமே! வி. கே. சிங்கைப் பாதுகாக்க முயன்ற உள்துறை அமைச்சர் ஜெயில் சிங், கடைசியில் தமது பிடிவாதத்தைத் தளர்த்தி வி. கே. சிங்கை வெளியேற்ற வழிவகுத்தார் என்ருல் அது எதிர்க் கட்சிக்கும் தர்ம நியாயத்நுக்கும் கிடைத்த மகத்தான வெற்றி யன்றி வேறென்ன?

தமிழகத்தில் கருணாநிதியின் பாதயாத்திரையில் சில குறைகளைப் பலர் கண்டிருக்கலாம் என்ருலும் திருச்செந்தூர் கோயில் அறங்காவலர்களின் ராஜிநாமா எதிர்க் கட்சிக்கு மட்டுமின்றி தார் மிகக் கோட்பாடுகளுக்கும் ஏற்ற மளிப்பதுதானே?

சட்டசபையில் கருணாநிதியின் பேருரைக்கு நெடுஞ்செழியன் பதிலளிக்கத்தான் செய்தார் என்ருலும் பல அம்சங்களில் கருணாநிதி சுட்டிக்காட்டிய குறைகளை அவர் ஒப்புக்கொள்ளவே நேர்ந்தது என்பதை மறுக்க முடியுமா?

மது உற்பத்தி - மொத்த வியாபாரம் ஆகியவற்றுக்கு லைசென்ஸ் வழங்குவதில் பல முறைகேடுகள் நடந்திருப்பதாக கருணாநிதி, உமாநாத், அன்பழகன் ஆகியோர் சட்டசபையில் சுமத்திய குற்றச்சாட்டுகளுக்குப் பதிலளிப்பதற்குள் அமைச்சர் சோமசுந்தரம் தட்டுத் தடுமாறித் திணறிப்போக வில்லையா?

எதிர்க்கட்சிகள் விழிப்புடன் இருக்கின்றன, மக்கள் தங்களுக்கு அளித்துள்ள பொறுப்பை நிறைவேற்றுவதில் கண்ணும் கருத்துமாய் இருக்கின்றன என்பதைத் தானே இவையெல்லாம் உணர்த்துகின்றன? 'எதிர்க்கட்சிகளிடம் மக்கள் நம்பிக்கை இழந்து விட்டனர்' என்று கூறிப் பிரதமர் மக்களை ஏமாற்ற முடியாது; ஒரு வேளை தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்ளலாம்!

## அராஜக அணி

சிவாஜிகணேசன் தாம் எம். பி. ஆக்கப்பட்டது கட்சி சார்பில் அல்ல, கலை உலகின் சார்பில் என்பதை மறந்து செயல்பட்டதன் பின் விளைவை மீனம்பாக்கத்தில் கண்டோம்.

இத்தனை நடந்த பிறகும் தொடர்ந்து அரசியல்வாதியாகவே இயங்கும் அவர், ''நம் பிள்ளைங்க தவறு செய்ய மாட்டாங்க'' என்று கூறி அத்துமீறலுக்கும் அராஜகத்துக்கும் ஊக்க மளித்திருக்கிருர்.

தலைவர்கள் தொண்டர்களைக் கட்டுப்படுத்த முடியாமல் போவதற்கு முக்கிய காரணம் தலைவர்கள் தங்களைத் தாங்களே கட்டுப்படுத்திக் கொள்ளாதது தான்.

ஒரு எம்.பி. பதவி கிடைத்து விட்டதற்காகக் காசு கொடுத்துக் கூட்டம் சேர்த்து ஒரு நாள் கூத்து நடத்துவதற்கு நாற்பது லட்சம் ரூபாய் செலவிடும் சிவாஜி கணேசன், மக்கள் சொத்தான திருவள்ளுவர் பஸ் எரிந்து சாம்பலானதற்கு நஷ்ட ஈடாக ஐந்து லட்சம் தருவாரா?

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்



கல்கி 1982 மார்ச் 21
துன்மதி பங்குனி 8
மலர்: 40 இதழ்: 34

# ரவிகுலதிலகன்

தடுக்கப்பட்டவர்கள் திடுக்கிட்டுத்தான் போனார்கள் என்ற லும் கணத்திலேயே திகைப்பை வெற்றி கொள்ளவும் செய் தார்கள். கவலைக் குறிகளை முகத்தில் பிரதிபலிப்பதே கோட்டை வாயில் காவலருக்குச் சந்தேகத்தை அதிகரிக்கச் செய்யும் என் பதை அறிந்திருந்ததால் அதை உள்ளழுத்திக்கொண்டு குரலை உயர்த்திப் பேசினான் குவளையின் தகப்பன்.

''ஐயா இது என்ன? எங்களை ஏன் தடுக்கிறீர்கள்? பாண்டியப் பேரரசுக்கு இந்த நாடோடிகளைக் கண்டுதானா அச்சம்?'' என்றான்.

''ஏய்! என்ன வாய் நீளுகிறது?'' என்று கேட்டுக்கொண்டே அங்கே வந்தான் வாயில் காப்போரின் தலைவன். ''யார் அங்கே?'' என்று சற்று முன் அதட்டியதும் அவன்தான் எனப் புரிந்தது.

''ஐயா! பாண்டிய வீரர்களின் வேல்கள் நீண்டால் எங்களைப் போன்ற நாடோடிகளின் வாய் நீளாமல் வாளா நீள முடியும்?'' என்றாள் குவளை.

அவன் கரங்களை இடுப்பில் வைத்துக் கொண்டு மேலும் கீழு மாகப் பார்த்தான்.

''என்னய்யா பார்க்கிறீர்?'' என்றான்.

''பார்க்கிறேனாவது? ஒரு குறத்திக்கு உள்ள குறும்புத்தனத்தை அளக்கிறேன்'' என்றான். அருகிலிருந்த வீரர்கள் 'கொல்' லென்று சிரித்தார்கள்.

உண்மையில் அவன் அளந்து கொண்டிருந்தது அவளது அழ கைத்தான். நகர நாகரிகம் தனக்குத் தெரியவே தெரியாது என் பது போல்தான் அவள் தன்னை இப்போது அலங்கரித்துக் கொண் டிருந்தாள். பயணக்களைப்பும் புழுதியும் வேறு அவள் உடலில் ஏறியிருந்தது. இருந்தாலும் அந்த மேனியில் இருந்த கவர்ச்சியை அவன் உணர்ந்தான். அகன்று விரிந்த கண்களின் காந்த சக்தியும் வெற்றிலைக் காவி ஏறிச் சிவந்த அதரங்களின் பளபளப்பையும் நீண்ட கழுத்து காரணமாக அவள் பெற்றிருந்த எடுப்பான தோற் றத்தையும் தனங்களின் உறுதியையும் அவன் பார்வை மொய்த்தது.

''பாண்டிய நாட்டில் எதையும் கண்களாலேயே அளந்து விடு வார்கள் போலும்!'' என்றாள் குவளை.

''நீ வார்த்தைகளைக் கொட்டி வாயால் அளக்கும்போது நாங்கள் கண்களால் அளந்தால் என்னவாம்'' என்றானவன் விட் டுக் கொடுக்காமல். மீண்டும் அவனருகே இருந்த வீரர்கள் சிரித் தனர். அவர்கள் அதிகமாகச் சிரிக்க வாய்ப்புத் தருவதே அவர்கள் தலைவனாகிய தனக்கு அகௌரவம் என எண்ணியவனாக, ''சரி, சரி, நீங்கள் எந்த தேசம்? இங்கே வரக் காரணம் என்ன? சொல் லுங்கள்'' என்றான்.

செம்பியன்



''எங்களுக்கு எல்லாத் தேசமும் சொந்த நாடுதான் ஐயா! கடைசியாக சோழ நாட்டிலிருந்து வருகிறோம்'' என்றாள் குவளையின் தகப்பன் கொம்மையன். ''ஊர் ஊராகச் செல்வதுதான் எங்கள் குலப்பழக்கம். பாண்டிய சக்கரவர்த்தி பரம பக்தர் மட்டுமல்ல, மாபெரும் வீரர் என்றும் கேள்விப்பட்டோம். எனவே வீரத்துக்கு வரவேற்பளிப்பார் என்று நம்பி வந்தோம்.''

''உங்கள் நடையுடை பாவனைகளைப் பார்த்தால் நாடோடிகளாகத் தோன்றினாலும் இந்தஉயர்ஜாதிப் புரவிகளைப் பார்த்தால்...'', என்று சந்தேகக் கண்ணோடு அனைவரையும் கூர்ந்து நோக்கினான்.

''ஐயப்பாடு எதற்கு? இவை சோழ இளவல் விஜயாலயனின் வெகுமதி. பொற்கழஞ்சுகள் கூடக் கொடுத்தார்.'' இடையிலிருந்து தொங்கிய ஒரு சிறு தோல் பையைத் தட்டிக் காட்டினாள் குவளை. 'கணீர் கணீர்' என்று ஓசை எழ அதைச் சற்றுப் பொறுமையுடன் பார்த்த காவலர் தலைவன், ''ஏன் சோழ நாட்டை விட்டு நீங்கள் கிளம்பினால் போதும் என்றாகி விட்டதோ விஜயாலயனுக்கு?'' என்று கேட்டுச் சிரித்தான்.



''இல்லை ஐயா. இந்தச் சீனனின் வீரத்துக்குக் கிடைத்த சன்மானம். எங்களுடைய பச்சிலை மூலிகை வேர்கள் பற்றிய அறிவுக்குக் கிடைத்த பரிசு.''

''ஓ! கடல் கடந்து வந்தவனா? பார்க்க விநோதமாக இருக்கிறானே என்று நான் சந்தேகித்தது சரியாகி விட்டது. சீனத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன். இவனை எங்கே எப்படிப் பிடித்தீர்கள்?''

''இவன்தான் எங்களைப் பிடித்துக் கொண்டான் ஐயா'' என்றாள் குவளை.

''பிடித்தாலும் பிடித்தான்! சரியான வாயாடிப் பெண்ணைப் பார்த்துப் பிடித்திருக்கிறானே!''

''இவன் பிறவி ஊமை ஐயா! இவனுக்கும் சேர்த்து நாங்கள்தான் பேச வேண்டும்.''

''அப்படியானால் நீ அதிகம் பேசுவதில் வியப்பில்லை.''

''இவன் சார்பில் வீரர்களுக்கு அறை கூவல் விடுப்பதும் நான்தான்.''

''தேவலாம். ஒரு ஊமை மல்லனைப் பிடித்துக் கொண்டீர்கள்: சில வித்தைகளைக் காட்டுகிறீர்கள்: மூலிகைக் கடை பரப்புகிறீர்கள். மன்னர்களிடமிருந்து பரிசில்களைப் பெறுகிறீர்கள்! வசதியான வாழ்க்கை!''

''ஐயா! மன்னர்களின் கருணைக்குப் பாத்திரமாவதென்பது அவ்வளவு எளிதென்று எண்ணுகிறீர்கள்: அவர்கள் பார்வையில் படுவதே அரிதாயிற்றே! மேலும் ஒரு முறை ஒரு மன்னர் மனமுவந்து பரிசளித்தால் பின்னர் மறுபடியும் அவரை அணுக முடியுமா? அவர் தருகின்ற சில வெகுமதிகள் எத்தனை நாளைக்குச் சோறு போடும்? உங்களைப் போலவா? அரசாங்க ஊழியத்தில் நிரந்தர வருவாய் பெறுகிறவர்களை விட அதிர்ஷ்டசாலிகள் யார் உண்டு?''

பேச்சை மேலே வளரவிட விரும்பாதவனாகக் காவலர் தலைவன், ''சரி சரி, சுங்கம் செலுத்திச் செல்லுங்கள்'' என்றான்.

''ஐயா, நாங்கள் வியாபாரிகள் அல்ல; நாடோடிகள். எங்களுக்குமா சுங்கம்?''

''அது உங்கள் நன்னடத்தைக்கு நீங்கள் அளிக்கும் உத்தரவாதம். இந்தக் குதிரைகளை இங்கே விற்றுவிட மாட்டீர்கள் என்பது என்ன நிச்சயம்? நீங்கள் ஒழுங்காக நடந்து கொண்டு திரும்பினால் போகும்போது இப்போது கட்டுகிற நிலுவையைப் பெற்றுச் செல்லலாம். ஊருக்குப் புதியவர்கள் விஷயத்தில் நாங்கள் எச்சரிக்கையாக இருக்க வேண்டாமா? யார் கண்டது நீங்கள் ஒற்றர்களாகக் கூட இருக்கலாமல்லவா?''

இதைக் கேட்டுக் குபீரென்று சிரித்தாள் குவளை. கொம்மையனுக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'இதென்ன இந்தப் பெண் இப்படிப் புதிய புதிய ஆபத்துக்களில் சிக்குகிறாளே' என்று எண்ணினான். காவலர் தலைவன் சற்றே வழிக்கு வரும்போது அவனுக்கு மறுபடி கோபமூட்ட வேண்டுமா?'

''பெண்ணே! உனக்கு அடக்கத்தை உன் அப்பன் கற்றுத்தரவில்லையானால் சொல்லு. நான் அந்தப் பொறுப்பை ஏற்கிறேன்'' என்று தலைவன் சீறவும், ''அதற்ில்லை ஐயா! ஒற்றர்கள் எங்களைப் போல் எளிதில் இனம் கண்டு கொள்கிற மாதிரியா வருவார்கள்? பாலுடன் நீர் கலப்பது போல மக்களோடு மக்களாகக் கலந்துவிட மாட்டார்களா? மதுரை, மாநகர்தான் என்றாலும் எந்த மூலை முடுக்கில் நாங்கள் இருப்பினும் எங்களைச் சுலபமாக நீங்கள் அடையாளம் கூறி விசாரித்துப் பிடித்துவிடவாமில்லையா?'' என்று குவளை தன் சிரிப்புக்கு விளக்கம் சொல்ல, ''சரி, சரி, எனக்கு உன்னுடன் அரட்டை அடித்துக் கொண்டிருக்கப் போதில்லை'' என்ற தலைவன் அவர்களிடம் எட்டுப் பொற்கழஞ்சுகளை வசூலித்துக் கொண்டு மீன் இலச்சினை இட்ட ஓலை நறுக்கொன்றை அளித்தான். ''பொற்கழஞ்சுகளைத் திரும்பப்பெறவேண்டுமென்றால் இதைப் பாதுகாத்து வையுங்கள்'' என்றான்.

''ஐயா! அதிகச் செலவின்றி இராத் தங்க ஒரு நல்ல இடம் சொல்வீர்களா?''

''ஆகா, சொல்கிறேன். கைக்கோளர் தெரு என்று கேளுங்கள். அவர்களிடம் பட்டு, பருத்தி நூலும் துணியும் வாணிபம் செய்யும் நாணு தேசிகர் உங்களைப் போன்ற அயல் நாட்டுப் பயணிகளுக்கென்றே விடுதி கட்டியிருக்கிறார்கள். அங்கே அளவான வசதிகள் செய்து தந்து நியாயமான கட்டணம் வசூலிப்பார்கள்.''

நன்றி கூறி நகர்ந்த அவர்கள் கூடல் மாநகரம் பற்றி ஏற்கனவே பலவாறு கேள்விப்பட்டிருந்தவர்கள்தாம். இருந்தாலும் அதன் வளமையையும் சிறப்பையும் நேரில் பார்த்தபோது அதிசயத்தில் திறந்த வாய் மூடாமலும் விரிந்த கண்கள் குறுகாமலும் மயங்கினர். தாமரை வடிவில் அமைந்திருந்த நகரத்தின் மையத்தில் கூடலழகர் கோயிலும் அதைச் சுற்றி அம்மலரின் இதழ்களைப் போலவே பலவகை வணிக அங்காடிகளும் குடியிருப்புக்களும் அடுக்கடுக்காய் அமைந்திருந்தன.

**'அப்பு'வை வைத்து விளையாட்டை ஆரம்பித்து விட்டார்கள். ஏஷியன் கேம்ஸ் '82 முஸோரியிலேயே துவங்கிவிட்டதா என்ன?**
**- சாருகேசி**



பாங்க் ஆஃப் பரோடாவில்
சேமிப்பது என்றாலே,
கவர்ச்சியான திட்டங்கள்
மற்றும் கனிவான
சேவை





**பாங்க் ஆஃப் பரோடா**
(இந்திய அரசுக்குச் சொந்தமானது)



நீதிபதி: கொலை, கொள்ளை, கற்பழிப்பு—உன்னிடம் நல்ல குணம் ஒன்றுமே கிடையாதா....?
கைதி: காலையிலே குளித்த பிறகுதான் எதையுமே செய்வேனுங்க.......!
- கே. எம். இளங்கோ

கொற்கையிலிருந்து வந்த முத்துக்களின் குவியலுக்கு ஒரு வீதி; பலவகை அகில்களின் அம்பாரங்களுக்கு ஒரு வீதி; பெண்களுக்கான பல்வித தங்க வெள்ளி ஆபரணங்களின் ஜொலிப்பு ஒரு பக்கம்; அடுக்கடுக்காக வாள்கள் வேல்கள் கேடயங்கள் இவற்றின் பளபளப்பு இன்னொரு புறம். பருத்தி ஆடைகளின் கவர்ச்சி இங்கே; பட்டாடைகளின் பளபளப்பு அங்கே என்று எல்லாமே கண்ணைக் கவர்ந்தன.

ஒரு முத்துச் சரத்தைக் குவளை கையிலெடுத்துப் பார்த்தபோது கடைக்காரன் சற்றே சந்தேகத்தோடு ''பெண்ணே! இவை மிக விலை உயர்ந்தவை. அரசிளங் குமரிகளும், பெருஞ் செல்வந்தர் வீட்டு நங்கையரும்தான் இவற்றை வாங்க முடியும்'' என்றான்.

''என் மதிப்பில் இவை உயரவில்லை ஐயா'' என்று கூறித் தன் கரத்திலிருந்த மாலையை முத்துக் குவியல்கள்மீதே நழுவ விட்டாள் குவளை.

''மதிப்பில் உயரவில்லையா? என்ன உளறுகிறாய்?'' என்றான் கோபமாக.

''ஆம் ஐயா! கொற்கையில் முத்துக் குளிக்கப் பாண்டி நாட்டில் சிறைக் கைதிகள் பயன்படுத்தப் படுகிறார்கள் என்று அறிகிறேன். ஆழ்கடலில் மூச்சு முட்டி இறந்தாலும் அல்லது சுறாக்களுக்கு இரையானாலும் சிறைக் கைதிகள்தானே பாதகமில்லை என்ற எண்ணம் நிலவுவதே இதற்குக் காரணம். எந்த ஒரு முத்துச் சரமாவது பாண்டி நாட்டு வீரன் ஒருவன் உயிருக்குத் துணிந்து கடலில் முத்துக் குளித்து எடுத்த முத்துக்களால் ஆனது என்று நீங்கள் கட்டிக் காட்ட முடியுமானால் அது என் மதிப்பில் உயரும். அதை விலை கொடுத்து வாங்கிக் கொள்ளவும் செய்வேன்'' என்று கூறித் தன் இடுப்பிலிருந்து தொங்கிய சுருக்குப் பையைத் தட்டிக் காட்டினாள். பொற் கழஞ்சுகள் கலகலத்தன.

கடைக்காரனைத் திகைக்கச் செய்துவிட்டு அவள் மேலே நடந்தாள். விளக்கு வைக்கும் நேரமாகிவிட பல கடைகள் மூடப்பட்டும் பூட்டப்பட்டும் வந்தன. மறுநாள் மேலும் சுற்றிப் பார்க்கலாம் என்று தீர்மானித்தவர்களாய் நாலு தேசிகர் விடுதி பற்றி விசாரித்து அறிந்து கொண்டு போய் இரவு தங்க அனுமதி பெற்றார்கள். குதிரைகளைக் கட்டித் தீனி போடுவதை மேற்பார்வையிட்டுவிட்டு வந்தான் கொம்மையன்.

அனைவரும் குளித்து உடை மாற்றி உணவருந்திப் படுத்தார்கள். பயணக் களைப்பில் எல்லோரும் சீக்கிரமே உறங்கியும் போனார்கள்—குவளையைத் தவிர.

அவள் நினைவிலே விஜயாலயன் தோன்றி அலைக்கழித்தான். கோமகனிடம் உறுதி அளித்துவிட்டு வந்தபடி தான் ஏற்றுள்ள பெரும் பொறுப்பை வெற்றிகரமாக நிறைவேற்றவேண்டுமே என்று எண்ணியபோது அவளுக்குக் கவலையாகவே இருந்தது.

பாண்டிய மன்னன் பரசக்கர கோலாகலனை எப்படியாவது சந்தித்து ஏதோ ஒன்றைச் சாதித்துவிடலாம் என்று ரகசியத் திட்டம் போடுவது எளிது. ஆனால் காரியம் அவ்வளவு சுலபமாய் நிறைவேறுமா? கூடலழகனின் அருள் கூடினால், பேரதிர்ஷ்டமும் இருந்தால் சாத்தியமாகலாம்!

கவலை காரணமாய் உறக்கம் பிடிக்காமல் நீண்ட நேரம் புரண்டு புரண்டு படுத்த குவளை, கடைசியில் ஒரு வழியாகக் கண்களை இருட்டிக் கொண்டு வருவதை உணர்ந்தபோது குதிரைகளின் கனைப்புச்சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்தாள்.

குதிரைகள், அதுவும் தங்களிடம் உள்ளது போன்ற உயர் ஜாதி புரவிகள் எங்கும் எப்போதும் நல்ல விலை பெறக் கூடியவை என்பதும் அதனால் குதிரைச் செட்டிகள் மட்டுமின்றிச் சில திருடர்களும் வாணிபர்கள் போல் நடித்து, களவாடிய குதிரைகளை விற்று ஏமாற்றுவார்கள் என்றும் குவளைக்குத் தெரியும்.

அதிலும் விஜயாலயன் அவர்களுக்குத் தந்திருந்த அராபியக் குதிரைகள் அறிவுக் கூர்மை மிக்கவை. அகால நேரத்தில் தங்கள் மீது சேணம்ஏற்றிக்கடிவாளம் பூட்டி அழைத்துப் போக முற்படுகிறவர்கள் நேற்றுவரை தங்களைச் சொந்தம் கொண்டாடியவர்கள் அல்ல என்று தெரிந்ததும் கனைத்திருக்கின்றன. எனவே குவளை, தங்கள் குதிரைகளை யாரோ கயவர்கள் கடத்திச் செல்ல முயல்கிறார்களோ என்று சந்தேகித்தவளாக தந்தை தம்பி, சீனன் ஆகியோரை அவசரமாக எழுப்பினாள். ஒருவர் பின் ஒருவராக வாசலுக்கு ஓடினார்கள். அங்கே அவள் ஊகித்தபடியே ஐந்து புரவிகளையும் அவிழ்த்து நடத்திச் சென்று கொண்டிருந்த மூவரை நட்சத்திர ஒளியில் மங்கலான நிழலுருவாகக் கண்டனர்.

''டேய், யாரடா அவன்!'' என்று அதட்டியபடியே அவர்களை நோக்கி வேகமாய் ஓடினான் கொம்மையன். அவர்களும்

தங்கள் வேகத்தை அதிகரித்து விடுதியின் எல்லைச் சுவரைக் கடந்து வீதியை அடைந்து விட்டனர். ''பிடி பிடி'' என்று கூச்சலிட்டான் கொம்மையன்.

இதே சமயம் தெரு முனையில் வந்துகொண்டிருந்த ஊர்க்காவல் படையினர் நால்வர், அரவம் கேட்டுத் தங்கள் குதிரைகளைத் தட்டி விட்டு வேகமாய் வந்து திருடர்களை நெருங்கியதும் கீழிறங்கி அவர்களை வளைத்துப் பிடிக்க முயன்றனர். திருடர்கள் எதிர்க்கவும் கைகலப்பு நிகழ, இதற்குள் தூக்கக் கலக்கத்துடன் அங்கே ஓடிவந்த சீனன் அளப்பரிய கோபத்துடன் யாரைத் தாக்குகிறோம் என்றுகூட நிதானித்து யோசிக்காமல் கைக்கெட்டியவர்களை யெல்லாம் குத்து விட்டுச் சரிக்க, ஒரே களேபரமாகி விட்டது. இந்த அல்லோல கல்லோலத்தினிடையில் இரண்டு திருடர்கள் குதிரைகள் மீதேறித் தப்பி ஓடிவிட்டனர். சீனனோ அகப்பட்டவர்களை விடமாட்டேன் என்பதே போல் இரண்டு கைகளுக்கிடையிலும் இரண்டு இரண்டு தலைகளைக் கழுத்தில் கொக்கி போட்டது போல் பற்றி இழுத்துக் கொண்டு வந்தான்.

ஒருவன் வீதியிலேயே மயங்கி விழுந்து கிடந்தான்.

விடுதி வாசலுக்குச் சீனன் வந்து சேரவும் அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த விடுதிக் காப்பாளன் சந்தடி கேட்டு விழித்தெழுந்து வாசலுக்கு வரவும் சரியாக இருந்தது. வாசலில் தொங்கிய நுந்தா விளக்கின் சுடரைப் பெரிதுபடுத்தி அந்த வெளிச்சத்தில் உறக்கம் போகக் கண்களைக் கொட்டிக் கொட்டி விழித்துப் பார்த்தான் விடுதிக் காப்பாளன். சீனனின் கரங்களில் சிக்குண்டிருந்த நால்வரையும் வரிசையாகப் பார்த்து வந்தபோது ஒரு முகத்தைக் கண்டதும் பிரமிப்பும் வியப்பும் பீதியும் அடுத்தடுத்து ஏற்பட அப்படியே சரிந்து மண்டியிட்டு மடிந்து, ''பிரபோ! இதென்ன விபரீதம்! எங்கள் விடுதி வாசலில் தங்களுக்கு இப்படி ஒரு அவமதிப்பு நேர வேண்டுமா? கோமகனே! நான் குற்ற மற்றவன்; என்னை மன்னியுங்கள்'' என்று பலவாறுகவும் நாக் குளறப் புலம்பினான். காற்றில் அரச இலை போல அவன் உடல் நடுங்கியது. குவளையும் மற்றவர்களும் செயலற்றுப் போயினர். (தொடரும்)

---

# இசையலை

# சக்தி பிறக்குது

● மார்ச் 3ம் தேதி மாலை பல்கலைக் கழக நூற்றாண்டு விழா மண்டபத்தில் 'சக்தி' குழுவின் இசை நிகழ்ச்சியை ஆறரைக்கு என்று அறிவித்துவிட்டு, ஏழே முக்காலுக்கு மெல்ல லாரி கோரில் வின்கிதார்இசையுடன் துவங்கினர்கள். சென்னையில் அன்றையத் தேதியில் இருந்த அத்தனை வெளி நாட்டுக்காரர்கள் — உல்லாசப் பயணிகள், ஹிப்பிகள் உட்பட — அத்தனை பேரும் நீண்ட படிக்கட்டுகளில் பொறுமையாய்க் காத்திருந்தார்கள்.

அமெரிக்காவிலேயே தங்கி வயலின் இசை வழங்கி வரும் எல். சங்கர்: அங்கேயே தபலா பள்ளி நடத்தி வரும் (உஸ்தாத் அல்லா ராக்காவின் பிள்ளை) ஜாகிர் ஹுசேன்; கிதார் விற்பன்னர் லாரி கோரில்; அவ்வப்போது அமெரிக்கா செல்லும் கடம் விநாயகராம்— இந்த நால்வரும் உருவாக்கிய இசைக் குழுதான் 'சக்தி'. அன்றைக்கு மேடையில் வேலூர் ராமபத்ரனுடன் சேர்ந்து ஐவராயினர்!

உண்மையிலேயே இசை நிகழ்ச்சி அத்தனை 'த்ரில்'லிங்காக இருந்ததா என்று துல்லியமாகத் தெரியவில்லை, ரசிகர்கள் இட்ட கூச்சலில். ரசித்து மகிழ்ந்து கூச்சலிடுகிறார்களா, நிறுத்தச் சொல்லிக் கூச்சலிடுகிறார்களா என்று மண்டையைப் பிய்த்துக் கொள்ள வேண்டியிருந்தது.

குடும்ப சகிதம் வந்திருந்த ஓவியர் ஜெயராஜ் சொன்னார்: இரண்டுஆண்டுகளுக்கு முன் நியூயார்க் போயிருந்த போதே 'சக்தி' குழுவின் இசையை ரசித்துக் கேட்டாராம். ஒரு ரெஸ்டாரண்டில் கிட்டத்தட்ட இரண்டாயிரம் பேர் அமர்ந்து (மேசை மேல் கூட!) முன் பின் தெரியாத ஆணுடனும் பெண்ணுடனும் சீட்டைப் பகிர்ந்து கொண்டு, ஆரவாரத்துடன் கூச்சலும் கும்மாளமுமாக ரசித்தார்களாம். வெறுமனே கைதட்டி ரசிக்கமாட்டார்களாம், எழுந்து நின்று கூத்தாடுவார்களாம். ''அதற்கு இது தேவலாம்'' என்றார். 'ஆனால் எல்லா வாத்தியங்களுக்கும் சேர்ந்து ஒரே ஸ்பீக்கரை வைக்கிறதற்குப் பதில் வயலினுக்கு, மிருதங்கத்துக்கு, கடத்துக்கு என்று தனித் தனியாக வைத்திருந்தால் எஃபெக்ட் இன்னும் பிரமாதமாயிருக்கும்' என்று அபிப்பிராயப்பட்டார்.

சாருகேசி



# ஆரோக்கியம், ஆனந்தம், ஒன்றுக்கொன்று ஆதாரம்!

Bournvita

Bournvita

## போர்ன்விடா பருகுங்கள்.

உங்கள் குடும்பத்தினருக்கு இன்சுவைமிக்க போர்ன்விடா வழங்குங்கள். போர்ன்விடாவில் கோகோ, மால்ட், பால் மற்றும் சர்க்கரையின் நற்பண்புகள் நிறைந்துள்ளன. நூறு ஆண்டுகளுக்கும் மேலாக உணவுப்பான நிபுணர்கள் — காட்பரி தயாரித்து அளிப்பது.

**காட்பரிஸ் போர்ன்விடா**

உங்களோடு வளரும் நன்மை



# ஆறாத காயங்கள்



நளினியின் விழிகளின் மேல் நீர் பளபளத்தது.

''விமல்! இனிமேல் நான் உங்களைச் சந்திக்க வரமாட்டேன். நீங்களும் என்னைச் சந்திக்க முயற்சி பண்ணாதீங்க... என்னை மறந்துடுங்க....''

விமல் அதிர்ந்தான்.

''அப்படின்னா இந்த ரெண்டு வருஷமா என்னைக் காதலிச்சியே அந்தக் காதல் போலியா? வெறும் நடிப்புத்தானா?''

அவள் அழுகையினிடையே கத்தினாள்.

''இல்லே விமல்... இல்லே.... என் உயிரே நீங்கதான்... நம்ப காதலேப் பத்தி அப்பாகிட்டே சொல்லி, நம்ப கல்யாணத்துக்கு ஏற்பாடு பண்ணுங்கன்னு நான் சொன்ன போது நீங்க என்ன சொன்னீங்க? 'என்ன நளினி... எனக்கு ஒரு வேலே வெட்டி கிடையாது... இந்த நிலேயில் உங்கப்பா கிட்டப் போய் நான் உங்க பொண்ணைக் காதலிக்கிறேன் கல்யாணம் பண்ணிக் கொடுங்கன்னு கேட்டா இதுக்கு அவர் சம்மதிப்பாரா? நான் கத்துக்கிட்ட ஓவியம் எனக்குக் கை கொடுக்காது போனாலும் பரவாயில்லே. வேறு ஒரு வேலேயையாவது தேடிக்கிட்டு உங்கப்பா கிட்ட வந்து கேக்கறேன்னு சொன்னீங்க. நானும் இத்தனை வருஷம் உங்களுக்காகக் காத்துக்கிட்டு இருந்தேனே?''

''நளினி... இப்ப எனக்கு ஒரு நல்ல சந்தர்ப்பம் வந்திருக்கு. ஒரு பிரபல வாரப் பத்திரிகைக்கு ஓவியம் போட என்னைக் கூப்பிட்டு இருக்காங்க. நிச்சயம் எனக்கு அங்கே வேலே கிடைக்கும்...''

''நான் அதிர்ஷ்டக்காரி இல்லே விமல்... இன்னும் பத்து நாள்லே நான் இன்னொருத்தருக்கு மனைவியாகப் போறேன்...''

நளினியின் விழிகளில் நீர் சிந்தியது.

விமல் சிதறிப் போனான்.

''நளினி.... நீ என்ன சொல்றே?''

''உங்களுக்குச் சீக்கிரமே ஒரு வேலே கிடைக்கும்னு அப்பாகிட்ட வாதாடிப் பார்த்தேன். விமல், அப்பா கேட்கலே. காலேஜ்லே புரொபஸரா இருக்கிற எங்க மாமாவுக்கு நிச்சயம் பண்ணிட்டாரு...''

''நீ இதுக்குச் சம்மதிச்சியா நளினி?''

''இந்தக் கல்யாணம் நடக்கலேன்னா தூக்கிலே தொங்கிடுவேன்னு அப்பா சொன்னாரு விமல். எனக்கு வேறே வழி தெரியலே. அப்பா விருப்பப்படியே....'' விம்மல் வெடித்தது.

''என்னை மன்னிச்சுடுங்க விமல்... இனிமே என் வாழ்க்கையிலே குறுக்கிடாதீங்க விமல்'' நளினி அவனேக் கையெடுத்துக் கும்பிட்டு விட்டுத் திரும்பிப் பார்க்காமல் அழுது கொண்டே ஓடினாள்.

இரண்டு மாதங்கள் ஓடின.

பக்கத்து வீட்டிலிருந்து படிக்க வாங்கி வந்திருந்த அந்த வாரப் பிரபல பத்திரிகை ஒன்றைப் புரட்டினாள் நளினி.

''இளமையின் ராகங்கள்'' என்ற சிறுகதைக்குப் போட்டிருந்த ஓவியத்தைப் பார்த்துத் துடித்துப் போனாள். ஒரு பெண் குளியல் அறையில் முக்கால் நிர்வாணத்தில் குளித்துக் கொண்டிருந்தாள்.

'இந்தப் பெண் — இந்த ஓவியம் — என்னைப் போலவே இருக்கிறதே?'

அந்த ஓவியத்தை ஆராய்ந்தாள்.

ஒரு ஓரத்தில் விமல் என்று போடப்பட்டிருந்தது.

அப்படியானால் இது விமல் போட்ட ஓவியம். இதை என் கணவர் பார்த்திருந்தால்?

நளினியின் உடல் லேசாக நடுங்கியது. அந்த வாரப் பத்திரிகையைச் சுக்கல் சுக்சலாகக் கிழித்துத் தீவைத்தாள்.

அடுத்த வாரம்.

கல்லூரியிலிருந்து மாலை வீடு திரும்பினான் ராஜுவேல். அவனுக்குக் காப்பி கொண்டு வந்து கொடுத்தாள் நளினி.

''இன்னைக்கு என்ன விசேஷம் நளினி? பிரமாதமா டிரஸ் பண்ணிக்கிட்டு இருக்கியே?''

''என்ன விளையாடறீங்களா? இன்னிக்கு சினிமாவுக்குக் கூட்டிக்கிட்டுப் போறதாச் சொன்னீங்களே?'' லேசாகக் கோபித்தாள் நளினி.

''ஸாரி டியர்! மறந்தே போயிட்டேன். இந்தா இந்த வாரப் பத்திரிகை. இதுல ''ஆறாத காயங்கள்''ன்னு ஒரு சிறு கதை போட்டிருக்கு படிச்சுப் பாரு. அதுக்குள்ளே நான் குளிச்சுட்டுத் துணி மாத்திட்டு வர்றேன்....''

அவன் நீட்டிய வார இதழை வாங்கினாள்.

அந்தப் பத்திரிகையில் ஒரு பெண் கலைந்து போன அரை குறை ஆடையில் படுக்கை அறையில் ஒரு வாலிபனின் அணைப்புக்குள் அடங்கிக் கிடந்தாள்.

இந்தப் பெண்....?

இந்த ஓவியம்.... நானேதான்!

'விமல் என்னைப் பழிதீர்த்துக் கொள்றாயா?'

ராஜுவேல் தயாராக வந்தான்.

''என்ன நளினி... கதையைப் படிச்சுட்டியா...?சினிமாவுக்குப் புறப்படலாமா?''

முகமெல்லாம் வியர்வை பூக்க... வார இதழோடு அவள் கைகள் லேசாக நடுங்க.... பயத்தோடு அவனைப் பார்த்தாள்

எப்படியோ கஷ்டப்பட்டு விமலின் விலாசத்தை வாங்கினாள்.

'விமல்! ஒன்று நிம்மதியாக வாழ விடு இல்லை என் சாவிலாவது உனக்கு நிம்மதி கிடைக்கட்டும்!'



என்று அவனைக் கேட்க வேண்டும் என்று முடிவு செய்து கொண்டாள். அவனைச் சந்திக்கப் புறப்பட்டாள். விலாசத்தைக் கண்டு பிடித்தாள். ஒரு மாடியில் அவன் அறை இருந்தது.

மாடிப் படிகளில் தாவி ஏறி அவன் அறைக் கதவைத் தட்டுவதற்குக் கையை ஓங்கிய போது – பேச்சுக் குரல் கேட்டது.

''தயவு செய்து இங்கிருந்து போயிடுங்க!'' இது விமலின் குரலேதான்.

''விமல்! அவசரப்பட்டு உங்களுடைய நல்ல எதிர்கால வாழ்க்கையைக் கெடுத்துக் காதீங்க. இப்பத்தான் பிரபலமான எல்லா வார இதழ்களும் உங்க படத்தைப் போட்டுக்கிட்டு வர்றாங்க. நீங்க.... அரை குறை ஆடையிலும் ஆடை கலைஞ்ச நிலையிலும் போடற அந்தப் படங்களும் உண்மையாகவே ஒரு பெண்ணை நேரில் பார்க்கறதைப் போல் ஓர் உணர்வையும் இன்பத்தையும் ஏற்படுத்துது. உங்க ஒருத்தர்கிட்டே இருந்து தான் படம் கேட்டு வாங்கி எல்லாப் பத்திரிகைகளும் போடறாங்க. சொல்லப்போனா... இன்னும் சில பத்திரிகைகள் உங்க படத்தினால காலத்தை ஓட்டிக்கிட்டு இருக்கு. உங்களுக்குப் பேரும் புகழும் கிடைச்சுக்கிட்டு வர்ற இந்தச் சமயத்தில இனிமே ஓவியமே போட மாட்டேன்னு சொல்றது புத்திசாலித்தனமல்ல....''

''நோ....நோ...! நான் உயிருக்குயிரா ஒருத்தியைக் காதலிச்சேன். என் உள்ளத்திலும் நினைவுகளிலும் அவதான் எப்பவும் நிறைஞ்சிருக்கா. நான் போடற படங்களை மாத்திப் போட எவ்வளவோ முயற்சி பண்ணிப் பார்த்தேன். தோல்விதான். ஓவியம் போட்டு முடிஞ்ச பின்னாடி அந்த ஓவியம் அவளாகத்தான் இருக்கா. அரைகுறை ஆடையிலே அவளைப் போட்டு உயிரோவியமாக்கி அவளை விலைக்குவிற்க நான் தயாரா இல்லே.. தயவுசெய்து வெளியே போயிருங்க... ப்ளீஸ்... கெட் அவுட்....'' விமல் பேயாகக் கத்தினான்.

கதவு திறக்கப்படு முன்னே மாடிப் படிகளிலிருந்து மெதுவாக இறங்கினாள் நளினி. அவள் விழிகளின் மேல் நீர் பளபளத்தது.

◆◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◆

## ஆன்றோர் வாக்கு...



✖ மார்க் டுவெய்ன்

● காலத்துக்கு உட்பட்ட நமக்குக் காலதேவனால் – யமனால் – வருகிற உபாதைகளை நிவிருத்தி செய்வதற்காகத்தான் மூன்று மூர்த்திகள் தெற்கு முகமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்களில் எந்த மூர்த்தியை உபாசனை பண்ணி, தியானம் செய்து, நினைத்து, அந்த மூர்த்தி நம்முடைய சித்தத்தில் வந்து ஆவாஹனம் ஆகும்படியாக, பிரகாசிக்கும்படி செய்து கொண்டாலும் அதனால் நமக்கு மரண உபாதை நிவிருத்தியாகும். மரண பயம் நீங்கும். இப்படிப்பட்ட தத்துவத்தை வைத்துத்தான் ஆலயங்கள் கட்டி, ஆலயங்களிலும் இந்த மூர்த்திகளுடைய ஸ்வரூபத்தைப் பிரதிஷ்டை செய்திருக்கிறார்கள். தத்துவம் தெரிந்தால் இவற்றின் உண்மை நமக்கும் பிரகாசிக்கும். ஒருவர் ஞான மூர்த்தி, ஒருவர் ஆனந்தமூர்த்தி, ஒருவர் யோக நித்ரா மூர்த்தி. இந்த மூன்று மூர்த்திகளும் நமக்குத் தெற்குத் திக்கிலிருந்து வரும் விரோதியின் பயத்தை ஸம்ஹாரம் செய்வதற்காகத்தான் தெற்கே பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்

● எல்லாப் பொறுப்பையும் ஈசன் மீது வைத்துவிடு. நீ சிந்திப்பதும், பேசுவதும், செய்வதும் எல்லாம் உனதல்ல: ஈசனே சிந்திக்கிறான், அவனே உன் மூலம் பேசுகிறான், அவனே செய்கிறான் எனத் தெளிய முயற்சி செய். காலக் கிரமத்தில் அநுபூதி கிடைக்கும். தரிசனம் வேறு: ஸ்வாநுபூதி வேறு. அகங்காரத்தை நசுக்கிவிடு. நானற்றிரு: ஆத்மத்தியாகம் பழகு.

—அரவிந்தர்

● மெய்ஞ்ஞான உணர்ச்சிதான் மனிதனுக்கு அவனுக்கு இருக்கும் தெய்வத் தன்மையை நினைப்பூட்டி, அவனைக் கருணாமூர்த்தியான கடவுளின் பிரதிநிதியாக வாழச் செய்வது. அன்பு, அருள், ஜீவகாருண்யம், பரோபகாரம், சாந்தம், சத்தியம், தியாகம் என்ற எல்லா நற்குணங்களுக்கும் ஆதாரம் மெய்ஞானம்தான். —நாமக்கல் கவிஞர்

● 'சொர்க்கம் – நரகம் இவற்றில் நம்பிக்கை உண்டா' என்று மார்க் டுவெயினைக் கேட்டபோது: ''நான் எனது அபிப்பிராயத்தைத் தெரிவிக்க விரும்பவில்லை. ஏனெனில் எனக்கு இந்த இரண்டுஇடங்களிலுமே நண்பர்கள் இருக்கிறார்கள்!''

● 'முயற்சி திருவினையாக்கும்' என்பது முன்னோர் உறுதிமொழி. நாம் எல்லோரும் சேர்ந்து முயற்சி செய்தல் அவசியம். தெய்வம் நன்மை செய்யும். நம் முன் ஏதேனும் வருத்தம் நேர்ந்தால் அதை நாம் எல்லாரும் ஒன்று சேர்ந்த இடத்தில் தாட்சண்யமில்லாமல் சொல்லித் தீர்த்துக் கொள்ள வேண்டும். நாம் குழந்தைகள். நாம் அழுதால் லோக மாதாபராசக்தி உணவு கொடுப்பாள். நாம் அழுவதற்கு வழி முயற்சியினால் தெய்வத்தை இரங்குவித்தல். ஆதலால் முயற்சி செய்வோம். —பாரதியார்

## 3 மாதத்திற்குப் போதுமான இரும்புச்சத்துடன் குழந்தை பிறக்கிறது



# 3 மாதம் ஆனபின், குழந்தைக்குத் தேவையான இரும்புச்சத்து பாலில் மட்டுமே கிடைப்பதில்லை.

## இரும்புச்சத்து அதிகமுள்ள :.பாரெக்ஸ் கொடுங்கள்

"தாயிடமிருந்து ஏராளமான இரும்புச் சத்தைப் பெற்று குழந்தை பிறக்கிறது. பிறந்த பிறகு மெல்லமெல்ல இரும்புச் சத்தின் அளவுக் குறையத் தொடங்குகிறது. பால் நல்ல உணவாயிருப்பினும் இரும்புச் சத்துப் பற்றுக் குறையினால் அது முழுமையாவதில்லை. ஆகவே, குழந்தைக்கு இரும்புச் சத்து அடங்கிய திட உணவுத் தேவைப் படுகிறது."

—Dr. Subhash C. Arya "Infant & Childcare for the Indian mother"

**டாக்டர்கள் :.பாரெக்ஸ். சிபாரிசு செய்யக் காரணம்?**

குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப் பட்டது :.பாரெக்ஸ்— குழந்தையின் இளம் ஜீரண சக்திக்கு ஏற்ப பக்குவம் செய்யப்பட்டது. இதில் விரைந்த வளர்ச்சிக்கான புரதச் சத்து; சக்திக்கான கார்போஹைட்ரேட், கொழுப்பு; எலும்புகளை திடமுடனும் பற்களை பலமுடனும் வளரச் செய்திடப் போதுமான கால்ஷியம், பாஸ்பரஸ், வைட்டமின்கள் உள்ளன. குழந்தையின் இரத்தத்திற்கும் உடல் ஆரோக்கியத்திற்கும் வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் அவசியமான இரும்புச் சத்தும் ஏராளமாக அடங்கியது—:.பாரெக்ஸ்.






**டாக்டர்கள் சிபாரிசு செய்வது :.பாரெக்ஸ்**
**குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு**

CASGLF-30-203 TAM

இரவு மணி பத்து.

மன உளைச்சல் என்கிற வண்டு என்னை வெகுவாகத் துளைத்து எடுக்கிறது. எண்ண எண்ண எண்ணக் குவியல் என் மனத்தில் மலையாய் உருவாக அதன் பாரம் தாங்காமல் சோர்ந்து சோர்ந்து படுக்கையில் சரிகிறேன்.

'அப்படி இருக்குமோ... இப்படி இருக்குமோ' என்று நினைக்க நினைக்க இதயம் வேகமாக அடித்துக் கொள்கிறது. பதைபதைப்பு அதனால் விளைந்த படபடப்பு இரண்டும் என் இதயத்தைக் கூறு போட... யாரோ என் உடம்பில் உள்ள சக்தியை யெல்லாம் உருவி விட்ட மாதிரியாய் ஒரு பலவீனம் வந்து என்னைத் தழுவிக்கொள்ள... அப்படியே சோர்ந்து படுக்கையில் சரிகிறேன்.

வாசல் கதவைத் தாழிட்டுப் பூட்டும் சப்தம் கேட்கிறது. இன்னும் சில நிமிடங்களில் அவர் இந்தப் படுக்கை அறைக்கு வருவார். என் முகத்தைப் பார்த்து நிச்சயமாய் என் அகத்தைப் புரிந்து கொள்வார்.

அவரிடம் என் மனத்தில் உள்ளதைக் கொட்டி... இந்தப் பிரச்னைக்குத் தீர்வு கண்டால் என்ன?... வேண்டாம்வேண்டாம்! அவர் ஒரு முன்கோபக்காரர். அவருக்கு ஆத்திரம் வந்துவிட்டால் கண் மண் தெரியாது.

படுக்கை அறைக்குள் நுழைந்ததும்—உடனே 'பட்' என்று கதவை அடித்துச் சாத்துகிறார். தாழிடுகிறார்.

எனக்குத் தூக்கி வாரிப் போடுகிறது. ஒருவேளை இவருக்கும் விஷயம் தெரிந்திருக்குமோ?

என் மடியில் வந்து விழாத குறையாய்ப் பக்கத்தில் வந்து தொப் என்று உரசிக் கொண்டு உட்காருகிறார்.

"என்ன என் தேவியின் முகத்தில் இன்று இவ்வளவு சோகம்..." என்று அவர் நாடக பாணியில் கேட்கவே...

இதுவரை குமுறிக் கொண்டிருந்த இதயம் இப்போது பொங்கித்ததும்பி வழியத்தொடங்கியது.

"அசடே.... என்ன அழுகை?... என்ன இதெல்லாம்?"

அவர் மார்பில் முகம் புதைத்து விம்முகிறேன்.

"எவ்வளவு உற்சாகமான ஒரு நல்ல 'மூடு'ல் உள்ளே நுழைந்தேன். அழுமூஞ்சியைக் காட்டி என் மூடை ஸ்பாயில் பண்ணி விட்டாய்...."

"நாற்பத்தைந்து வயது மனிதர் பேசுகிற பேச்சா இது?"

"அடடே... வயசு கோளாறு எல்லாம் உடம்பிற்குத்தான். உற்சாகமான மனத்துக்கு இல்லை. இளமையான எண்ணங்களை எப்போதும் மனத்தில் நிரப்பிக் கொண்டிருக்கிறேன். அதனால் இந்த வயதிலும் உற்சாகமாக இருக்கிறேன்."

"போதுமே உங்கள் பிரதாபம்."

"சரி, விஷயத்துக்கு வா. எதற்காக இந்த அழுகை ஆர்ப்பாட்டம் எல்லாம்?"

"வந்து....வந்து.... நம் ராஜாவைப்பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?"

"ராஜா உத்தமமான பிள்ளை... சத்புத்திரன் ஒரு தப்புத்தண்டாவுக்குப் போக மாட்டான்."

"நானும் இப்படித்தான் அவனைப் பற்றிப் பெருமையாக நினைத்துக்கொண்டிருந்தேன்."

புருவங்கள் மேலே உயர அவர் என்னை உற்றுப் பார்க்கிறார்.

"இன்று காலை எதற்காகவோ அவன் புஸ்தகத்தைத் திறக்கப்போய் அதில் ஒரு பெண்ணோட போட்டோ இருந்ததைப் பார்த்தேன். அதிலிருந்து என் மனம் படுகிற பாடு... மூக்கும் முழியுமாக இருக்கிறாள். பார்வை ஆளைக் கொத்துகிற மாதிரி இருக்கு. நெற்றியிலே பொட்டு இல்லை. முஸ்லீம் பெண்ணா? கிறிஸ்தவப் பெண்ணா? அதுவும் புரியலே. போயும் போயும் இவன் புத்தி இப்படியா போகணும்...."

"எங்கே அந்தப் படத்தை என்னிடம் காட்டு பார்க்கிறேன்."

"நீங்கள் ஒன்றும் பார்க்க வேண்டாம். நான் ஒருத்தி பார்த்தது போதும்."

"நம் ராஜாவுக்கு இந்தக் காதல் ஊதல் விவகாரம் எல்லாம் கட்டோடு பிடிக்காதே! எப்படி இப்படி ஆழம் தெரியாமல் காலை விட்டான்?"

"நானும் காலையில் இப்படித்தான் நினைத்துக்கொண்டு குழம்பிக் கொண்டிருந்தேன். அப்போ சொல்லி வைத்தாற்போல் சீனி மாமா வந்தார்."

"அவர் ஏதாவது பற்றவைத்தாரா?"

"அவர் எதற்காகப் பற்றவைக்கணும்? நேரிலே கண்டதைச் சொல்லிவிட்டுப் போக வந்தார். ராஜாவோட ஸ்கூட்டரில் ஒரு பொண் தொத்திக் கொண்டு மவுண்ட் ரோடு வழியாகப் போனதை அவர் இரண்டு கண்ணாலேயும் பார்த்தாராம்."

"சரி, சரி.... புலம்பாமல் தூங்கு. காலையில் அவனிடம் தனியாகப் பேசி ஒரு முடிவுக்கு வா. இப்போ அந்தப் போட்டோவைக் காட்டேன். ஏதோ கையில்லாத ரவிக்கைக்காரி என்று சொன்னாயே..."

"தூத்தேறி... நல்ல அப்பா...நல்ல மகன்! எல்லாம் என் தலையெழுத்து."

"ராஜா..... நானும் பார்க்கிறேன். அப்போ பிடித்து எதைத் தேடிக் கொண்டிருக்கிறாய்?"

"...இந்தப் புத்தகத்தில்தானே வைத்திருந்தேன். அதை யாரன் அறையில் நுழைந்து இந்தப் புத்தகத்தைத் திறந்து எடுத்திருக்க முடியும்?"

"நான்தான் எடுத்தேன் என்று வைத்துக் கொள்ளேன்."

ராஜா திடுக்கிட்டுத் திரும்புகிறான்.

"நீங்கள் எதைச் சொல்கிறீர்கள்?"

"ஒரு பெண்ணின் போட்டோவை..."

ராஜா மறுபடியும் அதிர்ந்து போகிறான்.

"அப்பாவுக்குத் தெரியுமா?"

"தெரியாது."

"உங்களுக்குத் தெரியக் கூடாது என்று தானே இந்தப் புத்தகத்தில் மறைத்து வைத்திருந்தேன். அப்படியும் பார்த்துவிட்டீர்களே?"

"சீனி மாமா காலையில் இங்கு வந்திருந்தார். நேற்று மௌண்ட்ரோடு பக்கம் உன்னைப் பார்த்தாராம். உன் ஸ்கூட்டருக்குப்பின்னால் ஒரு பெண்ணையும் பார்த்தாராம். காலையில் புஸ்தகத்தில் போட்டோவைப் பார்த்தேன். நம்ப முடியாமல் கலங்கிப் போய் ஒரு வேலையும் ஓடாமல் நான் இருந்தபோது சீனி மாமா வேறு வந்து இந்த விஷயத்தைச்



சொன்னர். என்னப்பா... ராஜா இதெல்லாம்.... படிக்கிற பிள்ளை நீ..."

"அம்மா... என்னம்மா நீங்கள்? நேற்று என் நண்பன் ரகு இல்லை... இங்குகூட என்னைத் தேடி அடிக்கடி வருவானே அவன் அம்மா என்னை பஸ் ஸ்டாப்பில் பார்த்தார்கள். ஒல்லியாய்ப் பார்க்க சின்னப் பெண் மாதிரி இருப்பார்கள். இந்தச் சீனி மாமாவுக்குக் கண் எழவும் சரியாகத் தெரியாது. வரட்டும் இந்தப் பக்கம்...."

"அவரைத் திட்டாதே... அப்புறம்?"

"....பஸ் வருகிற வரை காத்துக்கொண்டிருக்க நேரம் இல்லை. வீட்டில் விருந்தினர் வேறு.... சீக்கிரம் வீடு திரும்பணும்... மவுண்ட் ரோடு வழியாகத்தானே போகிறாய்? நான் சொல்கிற ஜவுளிக் கடையில் என்னை 'டிராப்' பண்ணிவிடு என்று கேட்டார்கள். தட்ட முடியவில்லை."

"உண்மையாகவா? அப்படியானல் அந்த போட்டோவில்உள்ளபெண் இல்லையா அது?"

"நீங்கள் பார்த்த அந்தப் போட்டோ அப்பாவின் பர்ஸனல் டைரியில் இருந்தது. சில தினங்களுக்கு முன் எதற்காகவோ அவர் பெட்டியைக் குடைந்தபோது யதேச்சையாக டைரியைப் பிரித்தேன். அந்த அம்மனின் தரிசனம். உங்கள் கண்ணில் பட்டால் ரொம்பவும் வேதனைப்படுவீர்கள் என்று அதைச் சாமர்த்தியமாய் என் புத்தகத்தில் ஒளித்து வைத்திருந்தேன். அதைப் பார்த்து விட்டு நீங்கள் என் மீதே...."

"ராஜா!... அந்தப் பெண்...?"

"அப்பாவோட பி. ஏ.... அதாவது பர்ஸனல் அஸிஸ்டெண்ட். எப்படி வேண்டுமானாலும் வாழலாம் என்கிற மாதிரி இரிவான்."

'.... வயதுக் கோளாறு எல்லாம் உடம்புக்குத்தான். உற்சாகமான மனத்துக்கு இல்லை. என் மனத்தில் என்றும் இளமையான எண்ணங்கள்.....'

"ராஜா....."

அப்படியே மகன் மீது சாய்கிறேன். என்னுள்ளே இதுவரையில அடித்த பேய்க் காற்று இப்போது திசை மாறிச்சூறவளியாய் என்னுள் வீசத் தொடங்குகிறது.

---

# சத்துணவு பற்றி எவ்வளவு தெரியும்?



1. பின்வரும் பழங்களுள் அதிக அளவில் ஊட்டச் சத்து நிறைந்தது எது?
(அ) ஆப்பிள் (ஆ) கொய்யாப்பழம் (இ) வில்வப் பழம் (ஈ) மாதுளை

2. உடல் வளர்ச்சிக்கு மிகவும் அவசியமான புரதச் சத்து எதில் அதிக அளவில் உள்ளது?
(அ) கோதுமை (ஆ) கோழி முட்டை (இ) ஆட்டுக் கறி (ஈ) நிலக்கடலை

3. தாய்ப் பால் அதிகரிப்பதற்காகக் கஞ்சி வைத்துப் பருகப் பயன்படுத்துவது எதை?
(அ) வெந்தயம் (ஆ) நிலக்கடலை (இ) பயத்தம்பருப்பு (ஈ) கேழ்வரகு

4. இரத்த அழுத்தம், இதய நோய் இவற்றைக் குணப்படுத்தக் கூடியது எது?
(அ) தக்காளி (ஆ) வெள்ளைப்பூண்டு (இ) காரட் (ஈ) உருளைக் கிழங்கு

5. உடம்பின் எடை கூட வேண்டுமானல் எந்தப் பழத்தைச் சாப்பிட வேண்டும்?
(அ) ஆரஞ்சு (ஆ) ஆப்பிள் (இ) மாம்பழம் (ஈ) வாழைப்பழம்

6. வைட்டமின் 'சி' சத்து பின்வரும் காய் வகைகளுள் எதில் அதிக அளவில் உள்ளது?
(அ) காரட் (ஆ) முட்டைகோஸ் (இ) நூல்கோல் (ஈ) முள்ளங்கி

7. குழந்தைகளின் பற்கள், எலும்பு வளர்ச்சி இவற்றுக்கு அவசியமான வைட்டமின் சத்து எது?
(அ) "டி" வைட்டமின் (ஆ) "பி" வைட்டமின் (இ) "பி-1" வைட்டமின் (ஈ) "சி" வைட்டமின்

8. தொற்று நோய்களை எதிர்க்கக் கூடிய வைட்டமின் "ஏ" சத்து பின்வரும் கீரை வகைகளில் எதில் அதிகமாக உள்ளது?
(அ) முளைக்கீரை (ஆ) பசலைக் கீரை (இ) முள்ளங்கிக் கீரை (ஈ) வெந்தயக் கீரை

9. பின்வரும் பழ வகைகளுள் கால்சியம் என்னும் சுண்ணாம்புச் சத்து எதில் அதிக அளவில் உள்ளது?
(அ) அன்னாசிப்பழம் (ஆ) தக்காளிப் பழம் (இ) எலுமிச்சம்பழம் (ஈ) சீதாப் பழம்.

10. தென் மாவட்டங்களில் ஓரளவு உணவாகக்கூடப் பயன்படுகிற இரும்புச் சத்து நிறைந்த ஒரு பொருள்.
(அ) பனங்கருப்பட்டி (ஆ) வெல்லம் (இ) கருப்பஞ்சாறு (ஈ) நுங்கு.

-யெஸ்பால்

விடை 62ம் பக்கம் பார்க்க

# பியர்லெஸ் வேனிஷிங் க்ரீம் கொண்டு முத்தான மென்மையும் பட்டொளியும் பராமரியுங்கள்.





உங்களது அழகிய சருமத்தோடு உடன் இணைந்து பிரதிபலிக்கக் கூடிய, இந்தியாவில் முதன் முறையாக அறிமுகமாகும் வேனிஷிங் க்ரீம். சிறிதளவு பியர்லெஸ் வேனிஷிங் க்ரீம் எடுத்து முகத்தில் தடவியதும் அது முகம் முழுவதும் படர்ந்து உங்கள் மேனியில் அழகிய பளபளப்பை ஏற்படுத்துவதை உணரலாம். மற்ற வேனிஷிங் க்ரீம்கள் போல எண்ணெய் பசபசப்பு இல்லாமல் புதுமையுடன் விளங்குவது, பியர்லெஸ் வேனிஷிங் க்ரீம். அது மட்டுமல்லாமல் இயற்கையுடன் கூடிய அழகான தோற்றத்தை. சருமத்திற்கு அளிக்கிறது.







உற்பத்தியாளர்கள்:
**பியர்லெஸ்**
காஸ்மெட்டிக்ஸ்,
தபால்பெட்டி எண்:2004
பெங்களூர்-560 020.

KIRON/P/821

**அழகுக் கலையின் ஆரம்பம் ... பியர்லெஸ் வேனிஷிங் க்ரீம்**

கூடவே கிடைக்கிறது பியர்லெஸ் போமேட்

# உங்கள் புதிய ஜான்ஸன் மிக்சர் கிரைண்டர் வேலை செய்யும் பொழுதே சூடான இலவச டிகாக்ஷன் காபி!

**JOHNSON®**

மிக்ஸர் கிரைண்டர்

## இதோ! இப்பொழுது

## ரூ. 85 மதிப்புள்ள இலவச பரிசுகள்




முன்னதாகவே
வாங்கிடுவீர் இந்தச் சலுகை
ஸ்டாக் இருக்கும் வரை மட்டும்.

**Kashyap**

இன்ஸ்டன்ட் காபி
பர்கொலேட்டர்



Parade/BE/8211

**JOHNSON®** தென் இந்திய சமையலுக்கும் ஏற்ப மிக உறுதியானது

# கல்யாண (ர)களை!

- உமாபதி -



சாஸ்திரிகள் (கோஷ்டி கல்யாணத்தில்): மாங்கல்யதாரணம் நடக்கணும். ஜோடிகளெல்லாம் சரியா இருக்கான்னு செக்கப் பண்ணிக்கிங்க!''



''டேய் அசடு! நமஸ்காரம் பண்ணுன்னு பொண்ணைச் சொல்லுங்கடா''



''கல்யாணப் பந்தல் வாழை மரத்துக்கு வேலி போட்டுக் காவல் வேறு போட்டிருக்கு!''
''வாழைத் தார் இருக்கே! காய்கறி விக்கிற விலைக்குக் காவல் நியாயம் தான்!''



கணவன்: ''என்ன இதெல்லாம்?''
நடிகை: ''எல்லாம் தாலிகள்! ஷூட்டிங்லே கட்டினது.... நூத்து அறுபத்து மூணு இருக்கு! நீங்க கட்டினதைச் சேர்த்தா நூத்தி அறுபத்தி நாலு!''



''என்னய்யாது! ஜானவாசம் ஊர்வலக் காருக்குச் சக்கரம் காணோம்!''
''பெட்ரோல் விக்கிற விலையிலே ரேட்டை ஏத்திட்டாங்க. அதனாலே சிக்கனமா பொய்க்கால் குதிரைமாதிரி பொய்க்கால் மோட்டார்!''



''இவள்தான் சைலஜா! வயது 25. எம். எஸ்ஸி.! இவளுக்கு என்ஜினியராகவோ டாக்டராகவோ உள்ள வரன் தேவை. மற்ற விவரங்களுக்கு அணுகுக!

கல்லில் மலர்ந்த காவியம்: 10

# கிருஷ்ணாபுரம்

கிருஷ்ணாபுரம் திருநெல்வேலிக்கு அருகில் உள்ள ஒரு சிற்றூர். அங்குள்ள திருவேங்கடநாதன் திருக்கோயில் சிற்பச் சிறப்பு மிக்கது. ஒவ்வொரு சிற்பமும் ஒவ்வொரு வகையில் மேலானது. ஒவ்வொன்றிலும் உணர்ச்சிபாவம் குதிகொள்ளும் சிற்பக் கலைச் செழிப்பை அங்கே நிதர்சனமாகக் காணலாம்.

அன்னத்தின் மீது ஆரோகணித்திருக்கும் ரதிதேவி எவ்வளவு ஒய்யாரமாகக் காணப்படுகிறாள்! அவள் முகத்தில்தான் எத்துணை களிப்பு!

வானுலக மங்கை ஒருத்தி சர்வாலங்கார பூஷிதையாக நிற்கும் காட்சி — காற்சிலம்பு முதல், முடிச்சூடிகை வரையுள்ள தமிழ்நாட்டு அணிகலன்களுக்குப் பட்டியல் போட்ட மாதிரியுள்ளது அல்லவா?

ஊருஹஸ்தமும், சூசிஹஸ்தமும் காட்டிச் சதுர தாண்டவம் புரியும் நாட்டிய நங்கையின் நளினம், முகபாவம், எல்லாம் நம்மை வசீகரிப்பனவாகும்.



நமது முன்னோர்கள் நமக்குப் பரம்பரைச் சொத்தாக அளித்துவிட்டுச் சென்றுள்ளது இந்தக் கலைப் பொக்கிஷங்கள். இன்றைய மதிப்பீட்டில் இச் சிற்பங்கள் பல கோடி ரூபாய்க்குச் சமம். இந்த அரிய பொக்கிஷத்தைக் கட்டிக் காப்பாற்றிப் போற்றி, வரும் தலைமுறையினருக்கு அளிப்பது நம் கடமை; நமது பண்பு.

தலைமுறை தலைமுறையாக வந்த கலைப் படைப்பின் அடிப்படை தூய்மை என்னும் பக்தியும், நேர்மை என்னும் சக்தியும் தான்! அந்த அடிச்சுவட்டைப் பின்பற்றுவது நமது லக்ஷ்மி மில்ஸ்.

"செய்யும் தொழிலே தெய்வம்; அதில் நேர்மையே எங்கள் செல்வம்" என்ற குறிக்கோளுடன் மக்களுக்குச் சேவை செய்வதையே தனது தலையாய கடமை யாகக் கொண்டு விளங்குவது நமது லக்ஷ்மி மில்ஸ்!



# லக்ஷ்மி மில்ஸ்

## கம்பெனி லிமிடெட்

கோயம்புத்தூர்





# தன்னை மறந்தாள்




உள்ளத்துக்கும் உடலுக்கும் நடக்கும் வழக்கே மனித வாழ்க்கையில் பெரும் பகுதியாக அமைகிறது. உள்ளத்திற்கு உடல் சில நேரம் இசைகிறது. பெரும்பாலும் உடல் செல்லும் விருப்பத்துக்கே உள்ளம் இசைந்து விடுகிறது. இந்த உடம்பு, மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற புலன்களுடன் கூட்டுச் சேர்ந்திருப்பதால், பல நேரங்களில் உள்ளத்தில் உள்ள எண்ணங்களுக்கு மாறாக உடல் தன் போக்கில் போய்க் கொண்டிருக்கிறது. அதனால் புலன்களின் ஆதிக்கத்துக்கு உள்ளம் அடிமைப்பட வேண்டியுள்ளது. இதன் காரணமாகவே மகா கவி பாரதியாரும் பராசக்தியிடம் ''உள்ளம் நாடும் பொருள் அடைதற்கன்றோ — மலர்த் தாளில் விழுந்து அபயம் கேட்டேன்'' என்றும், ''விசையுறு பந்தினைப் போல் — உள்ளம் வேண்டியபடி செல்லும் உடல் கேட்டேன்'' என்றும், புலன்களின் மீது தனியரசாணை வேண்டும் என்றும் பாடினார்.

புலன்களின் பழக்கத்தால் உடல் பல நேரம் உள்ளத்தின் நற்சிந்தனைகளைச் செயல்பட ஒத்துழைப்பதில்லை என்பதை அறிந்து பக்தி உலகம் ஓர் அருமையான வழியைக் கண்டுபிடித்துள்ளது. உள்ளத்தின் நற்சிந்தனைகளுக்குக் கேடு இல்லாத வழியில் உடலையும் உடன் கொண்டு செல்ல பக்தியுலகம் கண்டுபிடித்த ஒரு நெறியே நாயகி — நாயகன் பாவம். தன்னை நாயகியாகவும், இறைவனை நாயகனாகவும் எண்ணி ஒரு உறவை ஏற்படுத்திக் கொள்ளும்போது உடலும் உள்ளத்தின் கருத்துக்கு ஒத்துழைக்கிறது. அந்தப் பாவனையே உடலுக்கும் திருப்தி அளிக்கிறது.

நாயகி — நாயகன் பாவத்தில் இறைவனைப் பாடியவர்களில் திருநாவுக்கரசருக்குத் தனிப் பெருமை உண்டு. கருவாகிக் குழம்பிருந்து கலித்து மூளை கருநரம்பும் வெள் எலும்பும் சேர்ந்தொன்றாகி உருவாகிப் புறப்பட்டு இங்கு ஒருத்தி தன்னால் வளர்க்கப்பட்ட இவ்வுடம்பு, உள்ளத்தின் சிந்தையுடன் உடன் செல்ல வேண்டுமென உணர்ந்து பாடினார். அதனால் தன் உள்ளத்தையே நாயகி ஆக்கி விட்டார்.

ஒரு நாயகி தன் நாயகனைப் பற்றுவதற்கு மெல்ல மெல்ல மேற்கொள்ளும் நடைமுறைகளை அந்த நாயகியும் பின்பற்றுகிறாள்.

இவன்தான் தனக்கு நாயகன் என உறுதியாகிவிட்டால், ஒரு நாயகிக்கு உடனே நாணமும் மகிழ்ச்சியும் ஏற்பட்டு விடும்.

முதலில் தன் நாயகன் பெயரென்ன என்று அறிந்து கொள்வதில் அவளுக்குத் தனியாத ஆசை. தன் பெயரையும் அவன் நாமத்தையும் இணைத்துப் பார்ப்பதில் பிறக்கும் ஆசையே தனி.

அடுத்துத் தன் நாயகன் வண்ணம் — அதாவது அழகை அவள் எண்ணிப் பார்ப்பாள். உயரமா? சிவப்பா? என்றெல்லாம் அவன் வண்ணத்தை ரசிப்பதில் விருப்பம்.

பிறகு அவன் ஊர் எது என்று அறிந்து கொள்வதில் ஒரு காதல். மெல்ல மெல்லத் தொடங்கும் இந்த விசாரணை விரைவிலேயே முடிந்துவிடாதா? பிறகு? ''அவர் பைத்தியம்'' பிடிக்கும்.

திருமணம் ஆகிவிடுகின்றது.

பிறகு அப்பா, அம்மா உறவெல்லாம் பாதிதானே?

திருமணத்துக்கு முன்னர் எந்த ஆடவனைக் கண்டாலும் கண்ணில் படாமல் ஓடி ஒளிந்து கொண்டிருந்தாள், அவள். அதுதான் அவளுக்கு ஆசாரம். ஆனால் திருமணமாகிவிட்ட பின்னரோ கணவருடன் கைகோத்துக் கொண்டு போவதில் அவளுக்கு என்ன தடை?

இந்த ஐக்கியம் ஏற்பட்ட பின்னர், அந்தப் பெண்ணுக்கு அமைந்த பெயரும் கூட அல்லவா மறைந்து விடுகின்றது. 'இன்னார் மனைவி' என்று தன் நாமம் கெட்டுத் தலைவன் நாமத்துடன் ஒன்றிவிடுகிறாள். அவன் அன்புக்கு ஆட்படுவதில் ஒரு மகிழ்ச்சி.



இறைவா! என் நண்பர்களிடமிருந்து என்னை நீ காப்பாற்றுவாயாக! விரோதிகளை நானே கவனித்துக் கொள்வேன்!

—வால்டேர்

பெ. கலாசாமி

திருநாவுக்கரசரின் உள்ளமாகிய நாயகியும் அப்படித்தான்.

அவள் முதலில் இறைவனாகிய நாயகன் நாமத்தைக் கேட்டாள். பின்னர் அம் மூர்த்தியின் அழகைக் கேட்டாள். பிறகு அவன் திருவாரூரைப் பற்றிக் கேட்டாள். மெல்ல மெல்ல அவனுக்கே பைத்தியமானாள். வளர்த்த தந்தை தாய் என்ற உலகியல் உறவை யெல்லாம் மறந்தாள். உலகியல் ஆசாரத்தை மறந்தாள். தன்னை மறந்தாள். தன் நாமம் மறந்தாள். தலைவனுக்கே ஆளானாள்.

''முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்

மூர்த்திஅவன்இருக்கும் வண்ணம் கேட்டாள்,

பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்

பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்

அன்னையையும் அத்தனையும் அன்றே நீத்தாள்

அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்

தன்னை மறந்தாள்: தன்நாமம் கெட்டாள்

தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே!''

## இலக்கியத்தில் இறையுணர்வு

"இந்தாப்பா செல்வராஜு! இந்த மேட்டரை அர்ஜண்டா கம்போஸ் பண்ணி புரூஃப் போட்டு அனுப்பச் சொல்லு..."

"சார்... கம்பாசிடர் கந்தசாமி கந்தஞர் காச் மூச்னு."

"என்னப்பா காணுவுக்கு காணுவா? காதுல பூ எத்தனை நடவை பாத்தே?"

"செட் அசிஸ்டென்டாச்சே...தெனிக்கும் பாத்துப் பாத்துப் பழகிப் போச்சு... கந்தசாமி எடிடோரியல் கம்போஸ் பண்ணிகிட்டு இருக்காரு...."

"என்னய்யா கண்டைக்காய் எடிட்டோரியல்... அவர் எழுதறது எடிட்டோரியல் இல்லே....இடியட்டோரியல்... என்ன சொல்றீங்க, ஜயராமன்."

"நான் ஒண்ணும் சொல்லலே... சாயங் காலம் பாரம் தயாராகணும். இப்போதான் தொடர்கதைக்கு முதல் புரூஃப் வர்றது. இந்த ஆசாமி கையெழுத்தா பிரம்ம லிபி மாதிரி இருக்கு."

"யார்து.... மங்களம் ஆசிர்வாதம் நாவலா சார்... டு மினிட்ஸ்லே படிச்சுட்டுக் கொடுத்துடறேன். போன வாரம் ரொம்ப இன்டரிஸ்ட்ங்கான இடத்திலே வுட்டிருக்காங்க....."

"தெரியும். 'ரமணி... பெட் ரூம் கதவை மூடினுன்னு போட்டிருந்தா' இந்த வாரம் சும்மா ப்ளுவாகவே எழுதியிருக்காங்க.... அதான் கம்போஸிங்லே எல்லாரும் படிச்சுட்டு அப்புறம் கம்போஸ் பண்ண ஆரம்பிச்சிருக்காங்க.... ஏண்டா டிலேன்னு பார்த்தேன்...."

"சொல்லக் கூடாது. ரொம்ப போல்டா எழுதறாங்க..."



''நீ கல்யாணம் ஆகாத பையன். பாரேன் எத்தனை பேர் லெட்டர்ஸ் எழுதப் போறாங் கன்னு....''

''எழுதா விட்டாலும் 'கே. முரளி, சென்னை-92'ன்னு நீரே ஒண்ணு தயார்பண்ணி வையும்.... என்னப்பா ஆர்ட்டிஸ்ட் அந்த சினிமா ஸ்டில்லே பத்தாம் பக்கத்திலே ஒட்டிட்டியா?''

''என்னது பத்தாம் பக்கமா? அது போயிடுத்தே பிளேட் எடுக்க.''

''நாசமாய்ப் போச்சு.... 'பார்க்க பத். தாம் பக்கம்'னு லீட் போட்டிருக்கோமே.. இப்போ என்னய்யா செய்யறது? போய்யா. போய் பிராசஸ்லே 'பத்தாம் பக்கம்'னு இருக்கிறதை 'முப்பதாம் பக்கம்'னு எழு திட்டு வா...''

சார்... சினிமா விமரிசனம் புரூப் பார்த் தாச்சா...கரெக்ஷன் பண்ணணும்... இது என்ன சார்... செகண்ட் கரெக்ஷன்லே இத்தனை வாக்கியத்தைச் சேர்த்திருக்கீங்க?''

''பேசாதே... எடிடர் எழுதியிருக்காரு விமரிசனம் இந்த வாரம்.''

''ஆம்மா... இவர் அரைப் பக்கம் விமரி சனத்துக்கு ஆறு கரெக்ஷன் பண்றதுக் குள்ளே ஒரு குறுநாவலே கம்போஸ் பண்ணி ஆர்ட் புல் எடுத்துடலாம்.''

''ஹலோ... ஹலோ... ஆமாம் 'மத் தாப்பூ'தான்.... என்னது... உங்க கதையா? பேர் என்ன சொன்னீங்க? தேனே மறந்த வண்டுவா... எப்போ அனுப்பினீங்க.... படிக்கப் பார்த்து நல்லா இருந்தாப் போடு வோம். இல்லாவிட்டால் திருப்பி அனுப்பி பிடுவோம. என்னது.... மீத்து அனுப் னீங்களா... சரியாப் போச்சு... இவ்வளவு சீக்கிரம் ஆகாது.... வர்ற மாசம் போன் பண்ணுங்க.....''

''சார்.... இந்த வாரம் பதினேழு விளம் பரம்....''

''என்ன விளம்பர டிபார்ட்மெண்டுய்யா நீங்க.... மொத்தம் 32 பக்கம். அதிலே 17 பக்கம் விளம்பரமா... நாலு வாரமா விளம்பரமே இல்லாமே மேட்டாரப் போட்டு ரொப்பினேனும் கஷ்டப்பட்டு....''

''நான் என்ன செய்யறது... வருஷப் பிறப்பு வர்றதே....''

''சார்... ஆர்ட்டிஸ்ட் சோமு அனுப்பி னாருங்க.''

''இந்தாப்பா...தொடர் கதைக்குப் படம் வந்துட்டுது... சாலிட்டாக முழுப் பக்கத் துக்கு வச்சுடு... இருப்பா... இதென்னப்பா இப்படிப் போட்டிருக்காரு... சரி நம்ப தான் சரிபண்ணணும். கொஞ்சம் மேனாக்கு இருக்கிற மாதிரி லேசா லைன் போட்டுவிடு... நாளுக்கு நாள் சோமு ஓவராகப் போடு கிறார்....''

''சார்... இரண்டு இஞ்ச் இடம் மீந்து போறது. ஏதாவது துணுக்கு கொடுங்க, பக்கம் கம்ப்ளீட் ஆயிடும்.''

''ஹலோ... ஆமாம்... வணக்கம். ஆமாம் அவங்க சொன்னதைப் போட்டோம். மறுப்பு சொல்றதுன்னு எழுதி அனுப்புங்க போட றோம்... எங்களுக்கு இரண்டு பேரும் வேண் டியவங்கதான்.... கோபிச்சுக்கிட்டா லாப மில்லே.... கேஸா... கேஸ் போடுங்க. கேஸ் போடறவங்க எதுக்குப் போன் பண்றீங்க?''

''ஆசிரியர் கடிதங்கள் ரெடியா... இல்லா விட்டால் அந்தப் பெட்டிக்கு ஆதரவா இரண்டு லெட்டரைப் போடுங்க....''

''சார்! எடிட்டர் கூப்பிடறார். ஒரே ஜோக் இருஇடத்திலே வந்துட்டுதுன்னு கத்தறார்.''

''மணி... குருஷ்சேவ் போட்டோ இருக் கான்னு தேடி எடு... படம் இல்லாமல் துணுக்கைப் போட முடியலே... அந்தக் கலர் டிரான்ஸ்பரன்சி எல்லாம் போட்டோகிரா பர் துரைக்குத் திருப்பி அனுப்பிடுப்பா... அனுக்கிறான்.''

''சரி... ஸ்டிரைக் ஆர்டர் கொடுத்துடட் டுமா, இந்த எட்டுப் பக்கத்திற்கு?''




அகஸ்தியன்

# க்கை ஆபீஸ்

**அடி ரேவதி! உனக்கென்ன கிரீடம் வைத்திருக்கிறார்கள்? மயிலா? இல்லே, உனக்கும் கிளிதானா?**

அதே பரமசிவம் ஒரு இரண்டு நாளில் நேரேயே வந்து விட்டான் — விருந்தாடிக் கொண்டு.

வாசலில் அவனைக் கண்டதும் வரத ராஜுலு வழக்கமான சந்தோஷக் குரலில் 'ஹே வாப்பா' என்று வரவேற்று உள்ளே அழைத்து வந்தாலும் அவனுக்கு உள்ளுக்குள் கொஞ்சம் உதைப்புத்தான். ஏற்கனவே இவனது கதையைக் கேட்ட இவள் சீறி வைத்திருக்கிறாள். நேரில் கண்டதும் ஒரு மாதிரி இங்கிதமில்லாமல் நடந்து வைத்து விட்டாளானால்?

இருந்தாலும் உள்ளே வந்ததும் வரதராஜுலு, பக்கத்தில் கலோசனா இல்லையென்பதைப் பார்த்துக் கொண்டு மிக மெல்லிய சன்னக் குரலும் புத் தொனியில் 'என்னப்பா ரெண்டு எடத்திலேயும் சௌக்கியம் தானே?' என்று கேட்டான்.

பரமசிவமும் அதே தாழ்ந்த குரலில் 'ம். சௌக்கியம்தான். இங்கே எப்பிடி?' என்று திருப்பிக் கேட்டான்.

''ம்ம்.. மூச்.''

''இன்னும் அம்புடலியாக்கும்?''

''ஏன் பொறுமையா இருக்கா?''

''இருக்காதா? தான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்...''

''சரி சரி நிறுத்து.''

இந்தக் கட்டத்தில் கலோசனா திடீரென்று அங்கு வந்தாள். இனி யோசிக்கவும் தயங்கவும் நேரமில்லையென்று வரத ராஜுலு அவர்களைப் பரஸ்பரம் அறிமுகம் செய்து வைத்தான்.



''இவன் என் பழைய பிரெண்ட். அக்ரி கல்சர் டிபார்ட்மெண்ட்ல மானேஜரா இருக் கான். பேரு பரமசிவம். என் ஒய்ஃப் கலோசனு.''

''வணக்கம்.''

''தஞ்சாவூர்ல இருந்து டிரான்ஸ்ஃபர் ஆகி, இப்பத்தான் இங்க வந்து ஜாய்ன் பண்ணி யிருக்கான்.''

''பரமசிவமா?'' — கலோசனு யோசித்த படி கேட்டான். வரதராஜுலுவுக்குச் சுருக் கென்றது.

''காப்பி ஆர் டீ?''

''காப்பி'' — பரமசிவம்.

அவள் திரும்பும்போது வரதராஜுலு ''இவன் மத்தியானம் இங்கதான் சாப்பிடு வான்'' என்றான்.

''ம்ம்.''

உள்ளே வந்த கலோசனு, பரமசிவம், பரமசிவம் என்று நான்கு முறை உள்ளுக் குள்ளும் இரண்டு முறை வாய் விட்டுமே சொல்லிப் பார்த்தாள். ஏதோ முக்கிய மான பெயராகத் தெரிகிறதே. தவற விடக் கூடாத பெயராக.

ஆ, அந்த ராஸ்கல்; பெஞ்சாதி காலில் விழுந்தானே அவன் பெயரல்லவா? அவன் தானு இவன்?

அவளுக்கு உடம்பு படபடவென்று வர லோபாவில் உட்கார்ந்து கொண்டாள். ஒரே நேரத்தில் இரண்டு எதிர் முறை எண்ணங்கள் பின்னிக் கொண்டு வந்தன. அவர் சொல்வதுபோல இவன் மேல் தனக்கேன் இவ்வளவு ஆத்திரம்? இவன் தனக்குச் செய்த கெடுதல் என்ன? எதற்காக இவன் பேரைக் கேட்ட துமே தனக்கு உடம்பே படபடத்துக்கொண்டு வரவேண்டும்? ஆனல் இப்படிப்பட்டவன் களையெல்லாம் நமக்கென்ன வந்தது என்று யாருமே தட்டிக் கேட்காமல், எதிர்ப்புத் தெரிவிக்காமல், முனு முணுக்காமல் கூட இருந்தால் எப்படி? அங்கே ஒருவன், தன் னைப் போல ஒரு பெண்ணுக்கு அறிந்தறிந்தே பச்சைத் துரோகம் செய்து விட்டு வருவது தெரிந்தும் இங்கே ஒரு பெண், காப்பி சாப் பாடு ஆரத்தி எடுப்பது ரொம்ப நன்ருக இருக் கிறதே.

அங்கே வரதராஜுலு நண்பனுடன் அரட்டை அடித்துக் கொண்டே இருந் தாலும் அவன் எண்ணம் இங்கேதான் இருந் தது. மதிய உணவுக்கு ஒரு மாதிரி 'ம்ம்' சொல்லிவிட்டுப் போனவள் இன்னும் காப் பியே கொண்டு வரவில்லையே.

அப்போது மேலேறி வந்த பொன்னுத் தாயிடம் 'காப்பி எடுத்துக்கிட்டு வா' என் ருன் இவன்.

பொன்னுத்தாயி வந்து அதைச் சொன்ன தும் கலோசனு படக்கென்று 'சரி நீ ஒன் வேலையைப் பாரு' என்ருள்.

''யாரோ விருந்தாளி வந்திருப்பாங்க போல இருக்கு அம்மா.''

கலோசனுவின் குரல் ஆணையிட்டு ஒவ்வொரு சொல்லாகப் பிரித்து அழுத்திச் சொன்னது. ''நீ ஒன் வேலையைப் பாரு.''

அதற்கு மேல் வேலைக்காரிக்கு என்ன வேண் டிக் கிடக்கிறது. அவள் தன் வேலையைப் பார்க்கப் போனுள்.

ஒரு கால் மணி நேரமும் ஆகிவிடவே வரதராஜுலுவே எழுந்து உள்ளே வந் தான்.

''ஏமி சிலகா காபி வேயலனு?''

இந்தச் சிலகா இனி ஆரம்பத்தில் ஏரான மான விஸ்தீரணத்தில் பொழியப்பட்டா லும் அப்புறம் பையப் பைய, கொஞ்சலுக்கும் கெஞ்சலுக்கும் என்ற அளவைக்குள்ளாகச் சுருங்கிப் போயிருந்தது. ஆனல் அந்தச் சந்தர்ப்பங்களிலும் கூட கலோசனு வுக்கு லேசான எரிச்சலையே தரும். ஒரு பறவையின் சுதந்திரத்தையே கொலை செய்து விட்டு அப்புறம் அழகு அழகு என்று கொஞ்சு கிற ஒரு Sadist ஐக் (துன்புறுத்தி இன்பம் காணுய வக்கரித்த மனநிலைக்காரனை) கவைடு அந்தப் பறவையே சந்தோஷப்பட வேண்டுமாக்கும் என்று கேட்டுக்கொள்வாள் அவள். ஆனல் உண்மையில் ஓர் அலங்காரச் சொல்லான அந்தக் 'கிளி' இன்னொரு அலங் காரச் சொல்லான நேமியை: உள்ளூர நினைவு



படுத்திப்பிடரியில் அடித்து. வெளிக்கு ஏதோ வேறு ஒன்றாய் வேஷம் கட்டுகிறது என்பது அவளுக்குத் தெரியாது.

அவள் இந்த எரிச்சலும் சேர முகத்தைக் கடுமையாக வைத்துக் கொண்டு 'இல்லே' என்றாள்.

''ஏன் இல்லே?''

''அந்தக் காலிப் பயலுக்கு இங்கே காப்பி இல்லே.''

''நீ என்ன சொல்றே?''

''ஆமா.''

''வாட் நான்சென்ஸ். என்னு ஒரு கெஸ்ட் வந்திருக்கப்ப இப்பிடியா இன்சல்ட் பண்ணு வாங்க?''

''இது ஒண்ணும் இன்சல்ட் இல்ல. இன்ஸல்ட் பண்றதா இருந்தா, நேரா வந்து அவன் மொகத்துக்கு நேராவே சொல்லி யிருப்பேன்.''

வரதராஜுலுவுக்கு நடப்பதை அனுமானிப்பதே கஷ்டமாக இருந்தது.

''ஒனக்கென்ன பைத்தியம் புடுச்சிருக்கா?''

''எனக்கெதுக்குப் பைத்தியம் புடிக்குது?''

''டோன்ட் பி சில்லி.காப்பியைப்போடு.''

''முடியாது.''

''இப்ப வந்திருக்கறவனுக்கு நான் எப்பிடித்தான் மரியாதை செய்றது?''

''அது என் பிரச்னை இல்லே.''

''கலோசனா ப்ளீஸ்.''

''நோ... நோ.''

''இப்ப நீ போடப்போறியா இல்லேயா?'' வரதராஜுலு கடைசி ஆயுதமாக மிரட்டிப் பார்த்தான்.

''இன்னொரு தடவை கேட்டிங்கன்னா அந்த ஆளுக்குக் கேக்குற மாதிரியே இல்லேன்னு கத்துவேன்.''

வரதராஜுலு மடங்கினான். இது எல்லாவற்றையும் விட அதிகக் கோரமாக இருக்கும்.

அவன் திரும்பி வரும்போதே யோசித்துக் கொண்டு வந்து பரமசிவம் முன்னால உட்கார்ந்து சொன்னான். ''சாரி பரமசிவம். என் ஒய்ஃபுக்குக் காலையில இருந்தே ஒடம்பு சரியில்ல. இப்ப இன்னும் கொஞ்சம் ஒரு மாதிரி இருக்கு....''

''என்ன ஒடம்புக்கு?''

''சொல்றேன். வா, நாம போயி முதல்ல ஹோட்டல்ல ஒரு காப்பி சாப்பிட்டுட்டு வருவோம்.''

''ஏம்பா காப்பி இல்லாட்டி என்ன?''

''சும்மா வா.''

வரதராஜுலு சட்டை போட்டுக் கொண்டதும் இருவருமே கிளம்பினார்கள். ஹோட்டலில் காப்பி குடித்ததும் ஏதோ ஒரு பெரிய பொய்யைச் சொல்லி வரதராஜுலு பரமசிவத்தை அங்கிருந்தே கிளப்பி விட்டுவிட்டுப் பொல்லாத கோபத்தோடு வீடு திரும்பினான். தான் பட்ட அவமானத்தைப் போல் பத்து மடங்காவது இவள் உணரும்படி ஏதாவது கேட்டுவிட வேண்டுமென்ற துடிப்பு.

படி ஏறியதும் நேரே மேலே போய் சோபாவில் உட்கார்ந்திருந்த கலோசனா முன் நின்று கொண்டு கேட்டான்: ''ஒனக்கு இங்கே இருந்து வாழ இஷ்டமில்லேன்னு நெனைக்கிறேன்.''

''எதுனால சொல்றீங்க?''

''நீ இப்படி யெல்லாம் நடந்துக்கிட்டா அதுக்கு வேற என்ன அர்த்தம்?''

''நான் ஒங்களஒண்ணும் சொல்லலியே.''

''என்னைத் தேடி வந்திருக்கிற விருந்தாளியைஇன்சல்ட் பண்ணா என்ன,என்னையே இன்சல்ட் பண்ணா என்ன?''

''அவன் விருந்தாளி இல்ல. மனுஷன் தான் விருந்தாளியா வர முடியும். அவன் மனுஷன் இல்லே, மாடு.''

வரதராஜுலுவுக்கு வந்த கோபத்தோடு கோபமாக, என்ன, இவளை ஒருவேளை பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கோ அல்லது யாராவது மன நோய் நிபுணனிடமோ அழைத்துப் போக வந்துவிடுமோ என்றும் தோன்றியது. இருந்தாலும் அவன் இரைந்தான்.

''ஸ்டாபிட். நான்சென்ஸ். நான் இங்க வர்ரவன் ஒவ்வொருத்தனையும் கங்கையில போட்டுப் புனிதம் பண்ணிக் கொண்டார முடியாது.''

''நான் ஒண்ணும் புனிதம் பண்ணிக் கொண்டாரச் சொல்லலே. கொண்டாரவே வேண்டாம்னுதான் சொல்றேன்.''

அவன் பட்டென்று கன்னத்தில் அடித்தான். ''You exeed your limit எல்லே மீறிப் போறே. பைத்தியக்காரி.'' ஆனால் அடுத்த நொடி தான் இதைச் செய்திருக்க வேண்டாமோ என்ற உறுத்தல் உந்த விருட்டென அறையை விட்டு வெளியேறினான். பிறகு ஒரு பத்து நிமிஷத்துக்குள் சீருடை அணிந்து கொண்டு வீட்டை விட்டும் வெளிக் கிளம்பினான்.

வாங்கிய அறையால் அதிர்ந்து திகைத்து அப்படியே இறுகிப்போய் உட்கார்ந்திருந்த கலோசனா. அவன் போனது அறிந்ததும், மெல்ல முணுமுணுக்கத் தொடங்கினாள்.

''புருஷனாம் புருஷன். மட ராஸ்கல். அடிச்சுட்டுப் போறான் பாரு. இவனெல்லாம் நல்ல சாவு வந்து சாக மாட்டான்.''

''உங்க படங்களுக்குப் பழைய படத்து டைட்டில்களையே திரும்பவும் வைக்கிறீங்களே. ஏன்?''

''பழைய படமுன்னு நினைச்சாவது கூட்டம் சேரட்டுமேன்னு தான்.'' -சுயினாரகரம் மணி



இதுவரை நேராக இல்லாவிட்டாலும் அங்கு இங்கு நின்று நடப்பவைகளைக் கவனித்துக் கொண்டிருந்த பொன்னுத்தாயி இப்போது குறுக்கிட்டாள்.

''என்னம்மா இது? சரிதான். அதுக்காவ இப்பிடியா பேசுவாங்க? என்னமோ பட்டிக் காட்டுப் பொம்பளையாட்டம்?''

கலோசனா அவளை நிமிர்ந்து பார்த்து, ''அந்த ஆளு நடந்துக்கிட்டது மட்டும் ரொம்பப் பட்டணத்தனமா இருக்காக்கும்'' என்று கேட்டாள்.

''இதெல்லாம் சகஜம்தாம்மா. எவனோ எப்பிடியோ நடந்துக்கிட்டா அதுக்கு நீங்க ஏன் மனசு கஷ்டப்படணும்? இதெல்லாம் ஒலகத்துல என்ன புதுசா? ஆம்பிளைங்கன்னா எல்லா ஆம்பிளைங்களும் அப்பிடித்தான் நடந்துக்கிறாங்க. இப்பிடிப் பார்த்தா ஒலகத்துல யாரு கூடத்தான் நாம பேச முடியும்? இப்ப எங்களையே எடுத்துக்குங்க. எங்க வூட்டுக்காரருக்கு முன்னயே நாங்க அக்கா தங்கச்சி ரெண்டு பேரு. ஒரு நாளு பாத்தா, திடீர்னு இன்னொருத்தியைக் கொண்ணாந்து நிறுத்தி, இந்தா இனிமே இவளும் இங்கதான் இருப்பான்னு சொல்றாரு. என்ன செய்யறது? ரெண்டு நாளு லபோ லபோன்னு கத்திப் பாத்துப்பிட்டு, சரி, இருந்து தொலைடி, ஒன் தலையெழுத்துக்கு நாங்க என்ன செய்யறதுன்னு விட்டுட்டோம். என்ன செய்யறது? வந்தவளை வெட்டிப் போட்டுற முடியுமா? இல்ல அவரு மேலே கேசு போட்டு உள்ளே தள்ள முடியுமா?'' என்று தன் சரித்திரத்தையே உதாரணப்படுத்திப் புத்தி சொல்ல ஆரம்பித்தாள்.

அவ்வளவுதான், இவள் வெடித்துக் கொண்டு கத்தினாள். ''சரிதான் போடி. நீ பொறுத்துக்குவே. பத்தினிப் பரம்பரை. பொறுத்துக்க முடிஞ்சவ பொறுத்துக்க போ. நீங்கள்ளாம் இப்பிடிப் பொறுத்துப் போறதுனாலதான் அவனுக எதையும் செய்யறானுக.''

இதை எதிர்பார்க்காத பொன்னுத்தாயி கம்மென்று அடங்கிக் கொண்டு, தனது வேலைகளும் முடிந்து போயிருக்க, புறப்பட்டுக் கொண்டே ''நான் வர்றேனம்மா'' என்றாள்.

'ம்' என்று முதலில் சொன்ன கலோசனா, பொன்னுத்தாய் நகரத் தொடங்கினதும் மீண்டும் கூப்பிட்டுச் சொன்னாள்: ''இந்தா, நாளையிலிருந்துநீ வேலைக்குவரவேண்டாம்.''

பொன்னுத்தாய்க்கு அப்போது வியப்போடு வியப்பாக இப்படித் தோன்றியது: 'என்ன... இந்த அம்மா தன் சொந்தமாப் பேசற மாதிரித் தெரியலியே. உள்ள வேற என்னவோ சனியன் இருக்க மாதிரியில்ல இருக்கு.''

அதோடு, தற்போது கலோசனாவின் இந்தப் படபடப்பு, மயக்கம் திருதிருத்த விழியெல்லாம் சேர்ந்துகொள்ளவேதான் அவள் தனது இந்தக் 'காத்து கருப்பு' அபிப்பிராயத்தைச் சொன்னாள். வீட்டை மாற்றலாம் என்பது அவளது உபாயங்களில் ஒன்று.

வரதராஜுலுவுக்கோ தலை சுற்றிக் கொண்டு வந்தது. இது என்ன, தனக்கு மண்டையிடிக் காலமா? இங்கும் நிம்மதியில்லை. அலுவலகத்தில் இன்ஸ்பெக்டரோடு மோதல். அந்த ஆளை பார்த்துக்கொள்கிறேன் என்று சவால் விட்டிருக்கிறான். அங்கே ரேவதி விஷயமாகவோ இதுநாள்வரை இல்லாது புதிதாகத் தொந்தரவு கிளம்புவதாகத் தெரிந்தது. எவனோ 'ரோஸைப்பட்ட' சொந்தக்காரன்ஒருவன் உறவினர்களைஉசுப்பி விடுவதாக ரகசியம் காதுக்கு வந்தது. ஜெயிலுக்கே மொட்டைக் கடிதம் போய் இம்முறை ரேவதி கணவனைப் பார்க்கப் போயிருந்தபோது அவன் ஒரு மாதிரியாகப் பேசினதாக இரண்டு நாள் முன்பு அவள் சொன்னாள். இன்னும் சில நாளில் அவர்களெல்லாம் கூடி வாசலில் நின்று தன்னை வழி மறித்தாலும் மறிக்கலாம். ரேவதியோ ரொம்பப் பயப்படுகிறாள். மாற்று வழி என்னவென்று இருவருக்குமே தெரியவில்லை. இந்த நிலையில் எங்ஙக வீட்டை மாற்றிக்கொண்டும், இது பேய் பிசாசா இல்லை புத்தி மாறாட்டமா என்று ஆராய்ச்சி செய்து கொண்டும் இருப்பது?

ஆனால் அடுத்துத் தொடர்ந்த முப்பது நாற்பது நாட்களில் இந்தக் குழப்பத்தில் ஏதும் முன்னேற்றமில்லை. நாட்கள் அமைதியாகப் போயின. கொஞ்சம் நிம்மதியும் சந்தோஷமாகவும் கூட இருந்தது. கலோசனாவே கூட ஒரு தடவை நினைத்தாள். தான் ஒரு வேளை அந்த இரண்டு நிகழ்ச்சிகளிலும் இன்னும் கொஞ்சம் பொறுமை காட்டியிருக்கலாமோ? பொறுமை காட்டியிருந்தால் பிரச்னையே எழுந்திருக்காதோ? இனிக் கூடுமானவரை நிதானமிழக்கக் கூடாது என்று நினைத்துக்கொண்டாள். யாரோ எப்படியோ போனால் நமக்கென்ன? நாம் ஆத்திரப்பட்டு என்ன லாபம்?

வரதராஜுலு கூட நிம்மதிப்பட ஆரம்பித்தான். இனி இது மாதிரி நேராது என்று மனம் சொல்லியது.

ஆனால் மனநோய் என்பது, காச நோய் போல நிரந்தரத் தொடர்ச்சி இல்லை என்பதும் அது 'தாண்டுதல்' கிடைக்கிறபோது



# அசல் க்ளுகோன்-டி (T) ஒன்றே ஒன்று தான் உண்டு.

## அதனைத் தயாரிப்போர் க்ளாக்ஸோ.

வழக்கமான பச்சை
உறையின் மேலே
வெள்ளையில் அச்சிட்ட
**க்ளுகோன்-டி** (T) பெயர்
இருக்கிறதா பாருங்கள்.




மட்டமான போலிகள் பலவற்றுள், க்ளாக்ஸோ நிறுவனத் தயாரிப்பான அசல் க்ளுகோன்-டி யினை நீங்கள் வாங்குவது முக்கியம். இல்லையெனில், போலிகள் மூலம் உங்கள் குடும்ப உடல்நலத்திற்கே பேராபத்து வரலாம். க்ளாக்ஸோ நிறுவனத்தின், முற்றிலும் நம்பிக்கைக்குரிய தயாரிப்பாகும் க்ளுகோன்-டி; வைட்டமின் $D_1$, ஃபாஸ்ஃபரஸ், கால்ஷியம் ஆகியன செறிந்த தூய க்ளுகோஸ் பவுடர் அடங்கியது. தங்களுக்குத் தேவையான போது சக்திபெற லட்சக் கணக்கானோர் அருந்துவது இது.

க்ளுகோன்-டி தயாரிப்போர், க்ளாக்ஸோ — பலவகை உணவுப் பண்டங்களுக்கும், உயிர்காக்கும் மருந்துகளுக்கும் புகழ்பெற்ற நிறுவனம். வாங்கும் க்ளுகோன்-டி பேக்கெட் அசல்தானா எனப் பார்த்து வாங்குங்கள்.

**க்ளுகோன்-டி** (T)

**சக்தியை மீட்டுத்தர நம்பகமானது.**

**க்ளாக்ஸோ நிறுவனம் அளிக்கிறது.**

(T) டிரேடுமார்க்

யாமறிந்த
சுவைகளிலே
நரசுஸ்
சுவை போல்
இனிதாவது
எங்கும்
காணோம்!




ஜீவனுள்ள ஒரே காபி!

# நரசுஸ்

"தெர்மலோ" காபி!



**நரசுஸ்**
**காபி கம்பெனி**
சேலம் 636007.
கிளைகள்: தமிழகமெங்கும்.

ADWAVE/NCC/ 1966

மட்டும் உயிர் கொல்கிறது என்பதும் இவர்களுக்கு எப்படித் தெரியும்?

மறுபடியும் ஒரு தூண்டுதல் நாற்பது நாட்களுக்குப் பிறகல்லவா வந்து தாக்கியது.

இம்முறை அது பனிப் புயலாய், பனிப் பாறைகளைச் சரித்து உருட்டித் தள்ளிக் கொண்டு வந்தது. அது சுலோசனாவின் சிந்திக்கும் திறனைத் திக்குமுக்காட வைத்து முடமாக்கியது.

அது ஒரு கடிதம். மொட்டைக் கடிதம். ரேவதி விஷயமாக அவள் கணவனுக்கு எழுதியவர்கள் இப்போது இவளுக்கும் எழுதியிருந்தார்கள். அதில் ரேவதியின் வீட்டு விலாசத்தை எழுதி, எந்த நேரத்திற்கு வந்தால் இவளது கணவனையே அங்கு சந்திக்கலாமென்றும், எப்போது வந்தால் இவளது கணவனுக்கு மாமாவேலை செய்யும் கான்ஸ்டபிள் நாகப்பன் காய்கறி பலசரக்கு சப்ளை செய்வதைப் பார்க்கலாமென்றும் எழுதியிருந்தார்கள்.

இதைப் படித்து முடித்தபோது, இப்போதும் சுலோசனாவுக்கு வியர்க்கவும் உடல் படபடத்துக் கொண்டு வரவுமே செய்தது. இதை உணர்ந்தபோது அவள் தன் மேலேயே வெறுப்புற்று உதறிக் கொடுத்தபடி 'வெட்கம் வெட்கம்' என்று முணு முணுத்தாள். இதனால்தானோ என்னவோ அதற்கு மேல் அவள் உடல் முன்பு போல் மயக்க நிலைக்கெல்லாம் போகவில்லை. கொஞ்சம் சிந்திக்கவும் முடிந்தது. அதன் தேவையும் இருந்தது. ஏனென்றால் கடிதத்தின் உண்மை பொய்யை உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டுமே.

யார் இந்த ரேவதி? இதுவும் கூட எங்கோ கேட்ட பெயராகத்தான் தெரிந்தது. ஆனால் எங்கே கேட்டாள்?

போய்ப் பார்த்துவிட வேண்டியதுதான். விலாசம்? அது தெளிவாகத்தான் இருக்கிறது.

அப்புறம் இந்தக் கான்ஸ்டபிள் நாகப்பன். அட ராஸ்கல். இவன் இங்கே வரும்போது அம்மா அம்மா என்று எப்படிக் குழைகிறான்? வெளியில் போய் என்ன வேலை செய்கிறான்?

ஒரு மணி நேரத்துக்குள் அவள் அநேகமாகத் தன்னை ஒரு கட்டுக்குள் கொண்டு வந்து விட்டாள். பொன்னுத்தாய் வந்ததும் இவளிடத்தில் எந்த மாற்றமும் கண்டுபிடிக்க முடியாதபடி.

மாலை ஏதோ காரியமாக நாகப்பனும் வந்தான். இவள் மெல்ல அவனிடம் பேச்சு கொடுத்தாள்.

''நாகப்பன்!''

''அம்மா...''

''கல்யாணமெல்லாம் எப்போ?''

''ஏற்பாடு நடக்குதுங்க அம்மா.''

''பொண்ணு பாத்தாச்சா?''

''ம்... ரெண்டு பொண்ணு பாத்தோம். ஒரு பொண்ணு எனக்குக் கூடப் பிடிச்சு இருந்திச்சு. ஆனா அம்மா என்னடா அவசரம் இன்னும் ரெண்டு பொண்ணு பார்த்துட்டுச் செய்வமேன்னு சொன்னதுனால காரியம் அதுலயே நிக்குது.''

''ஆமாமா. ஒண்ணுக்குப் பத்து இடமா பார்த்துட்டே செய்யுங்க. காரியம் என்ன லேசான காரியமா? ஒரு சேல எடுக்கப் போனாலுமில்ல பத்து சேல பாத்துட்டு எடுக்குறோம்.'' — சொல்லிவிட்டு அவளே நினைத்துக்கொண்டாள். 'ஆமா, இந்தக் குத்தல் எல்லாம்தான் இதுகளுக்கு உறைக்கப் போகுதாக்கும்!''

''அப்பிடியே ஒங்க எஸ். ஐ. ஐயாவுக்கும் ஒரு பொண்ணு பாருங்க.''

''ஏம்மா அப்பிடிச் சொல்றிங்க?''

''அவரு ஆசைப்படுறாரப்பா.''

''அப்பிடிச் சொல்லாதீங்க அம்மா. அதுவும் நீங்க மகாலட்சுமியாட்டம் இருக்கப்ப.''

சுலோசனா தனக்குள் சொல்லிக் கொண்டாள்: 'மகாலெக்ஷ்மி, கிளி, தேமி, இப்பிடிப் பட்டங்கள் கொடுத்தே தலையில மொளகா அறைங்கடா.'

பிறகு அவனிடம் சொன்னாள், ''அப்பிடியில்ல நாகப்பன், அந்தக் காலத்தில எதுவும் தெரியாமச் சொல்லி வைக்கல. கிளியாட்டம் பெஞ்சாதி இருந்தாலும்—குரங்காட்டம் ஒரு வைப்பாட்டி வேணும்.''

நாகப்பன், இவளென்ன அடி வெட்டு வெட்டுகிறாள் போலிருக்கிறதே என்று திகைத்தான். விஷயம் தெரிந்து விட்டதா? முதலில் பொண்ணு என்று ஆரம்பித்து விட்டு இப்போது வைப்பாட்டி என்று பேசுகிறாளே. இருந்தாலும் அவன் தன் வழக்கமான பாணியில் துணிந்து அடித்தான். ''நம்ம ஐயாவ அப்பிடிச் சொல்லாதீங்க அம்மா. இவரு தருமரு. நானும் கூடத்தான் இருக்கேன். எவ்வளவோ இடத்துக்குப் போறோம், வர்றோம். எவ்வளவோ பொண்ணுகளப் பாக்குறோம். ஐயா கெட்ட எண்ணத்தோட அவளுகள தல நிமிர்ந்து பார்த்தது கெடையாது.''

'சரி, நாளை சங்கிலியாண்டபுரம், மூன்றாவது சந்து, வட கடைசி, முன்னால் வேப்ப மரம்; போனால்—தெரிந்து போகிறது' என்று இவள் தன்னுள் சொல்லிக் கொண்டாள்.

'ரேவதி, ரேவதி, ரேவதி. அடி ரேவதி, உனக்கென்ன கிரீடம் வைத்திருக்கிறார்கள்? மயிலா? இல்லை உனக்கும் கிளிதானா?'

(தொடரும்)

"கலா... சீக்கிரம் வாடி...அதோ பார் எதிர் வீட்டுக்குப் புதுசாக் குடித்தனம் வந்திருக்கே நித்யா... கிளம்பியாச்சு. ஜன்னல் வழியாப் பாரு...." என்று தன் சிநேகிதியைக் கூப்பிட்டுச் சொன்னாள் சொர்ணம். கலா ஜன்னல் கம்பிகளில் முகம் அழுந்தப் பார்வையைக் கூர்மையாக்கினாள்.

"ஆமா... நீ சொல்றது நெசந்தான். ரோஸ் கலர் புடவை கட்டிக்கிட்டுக் கிளம்பிட்டாளே...பூட்டை இழுத்துப்பார்க்கிறா." கலா, எதிர்வீட்டு நித்யா ரோட்டில் நடப்பதைப் பார்த்துவிட்டுத் தன் சிநேகிதியிடம் திரும்பினாள்.

சொர்ணம் நாற்காலியில் சுகமாகச் சாய்ந்து கொண்டாள். "கலா... நான் சொன்னபோது உனக்கு நம்பிக்கை இல்லாமல் இருந்ததே தினமும் இப்படித்தான். இந்த ஒரு வாரத்திலே இது ஐந்தாவதுநாள்!"

"எங்கேதான் போகிறாளோ?"

"கேட்டால் அடிக்க வருவே... சினிமாத் தியேட்டருக்குப் போகிறாளாம்."

"ச்சீ... யாருடி சொன்னா?"

"எங்க வீட்டு வேலைக்காரி தேவானையிருக்குல்லே அவளும் பார்த்திருக்கா: அவ புருசன் — தேவானை புருசன் — தியேட்டர்லே டீக்கடை வச்சிருக்கானில்லே... பார்த்தாளாம்..." சொர்ணத்துக்குப் பெரிய திருப்தி. தெருவில் உள்ள எல்லா வீட்டுப் பெண்களைப் பற்றியும் அவளால் சரியான செய்திகளைத் தர முடியும்!

"சொர்ணா... ஒரு வேளை தியேட்டர்லே வேலை செய்யற பொண்ணா? டிக்கட் கிழிச்சுக் கொடுக்கிறதா?..."

"சேச்சே... அப்படியிருந்தால் சாயங்காலமும், ராத்திரியும் போகணுமில்லே? அதான் கிடையாதே... மாட்னி ஷோ பார்த்துட்டு வந்துடும்... சில நாளிலே சீக்கிரமே வந்துடும்....."

"தினமுமா போயிட்டு வர்றா? ஏதாவது விஷயமா?...." என்று கேட்டுக் கண் சிமிட்டினாள் கலா.





# தினமுமா?

பாமா கோபாலன்

''...யாருக்குத் தெரியும்...ப்... கண்ணாலம் கட்டி ஆறு மாசம் கூட வாழலியாமே? நாளைக்குப் பால்காரி சங்கரி கிட்டே பேச்சுக் கொடுத்துப் பார்க்கணும்...'' சொர்ணம் தீர்மானமாகச் சொன்னாள்.

வியர்வை முத்துக்கள் புள்ளிக் கோலம் வரைய, நித்யா வேகமாக நடந்தாள். அதோ... தியேட்டர்.... அருகே மணிக் கூண்டு. மதியம் மணி இரண்டு.

அவசரமாகத் தியேட்டருக்குள் சென்றாள். சுமாராய்க் கூட்டம். மானேஜர் அறைக்குச் சென்றாள். விசாரித்துத் தெரிந்துகொண்டாள். டிக்கட் வாங்க க்யூ வரிசையில் நின்றாள்.

''மார்னிங் ஷோ, நூன்ஷோ, மாட்னி ஷோன்னு போட்டுக் குழப்பறாங்க; விசாரிக்க வேண்டியது அவசியமாறது. நல்ல வேளை இந்தத் தியேட்டரிலேயே இன்னொரு தியேட்டர் இல்லே...''

முதல் மணி அடித்தாகி விட்டது. பரபரப்பு. நியூஸ் பேப்பர் போட்டு உட்கார்ந்திருந்தவர்கள், கைகளை ஊன்றி எழுந்து கொண்டார்கள்.

இரண்டாவது மணி. நித்யா பரபரத்தாள். டிக்கட் கிடைக்குமா?

டிக்கட் கொடுப்பவர் செவ்வக அலுமினியப் பெட்டியை எடுத்துக் கொண்டு வந்தார். அவர் பார்வையில் க்யூவில் நிற்கும் நித்யா பட்டாள்.

'என்ன இது... இந்தப் பெண் தினமும் இந்தக் க்யூவிலே நிக்குதே... சினிமாப் பைத்தியமா? இல்லே தெரிஞ்சவங்க யாராவது நடிச்சிருக்காங்களா? முகத்தைப் பார்த்தால் ஜாலியா வர்ற பெண் மாதிரி இல்லியே?'

கூண்டுக்குள் நுழைந்து உட்புறம் தாளிட்டுக்கொண்டார்.

பெண்கள் வரிசை நகரத் தொடங்கியது.

''யாருடி அவ... போகக்குனு க்யூவுல பூந்துக்கறு.... வெளியே பிடிச்சுத் தள்ளுடி.. நாங்கள்ளாம் கருவாடு கணக்கா காயறோம் வெய்யில்லே... அறிவு இல்லே...?''

நித்யாவுக்குக் கஷ்டமாகத்தான் இருந்தது. என்ன பேச்சுப்பேசுகிறார்கள்? சே!

கௌண்டரில் ரூபாயைக் கொடுத்து டிக்கட்டைப் பெற்றுக் கொண்டாள். புடவைத் தலைப்பை இழுத்துப் போர்த்திக் கொண்டு விரைந்தாள்.

நித்யா உள்ளே நுழைந்தாள். வழக்கமாக உட்காரும் இடத்துக்குச் சென்றாள்.

நேரமாகி விட்டது. எல்லா விளக்குகளும் அணைக்கப்பட்டு விட்டன. விதானத்தில் நடு விளக்குத் தவிர.

சோப், காபி, ஷாம்பூ, ஹார்லிக்ஸ் விளம்பரங்கள் முடிந்தன. அப்பாடி...

விதான நடு விளக்கும் அணைக்கப்பட்டு விட்டது. செய்திச் சுருள் ஆரம்பம்.

நித்யா நாற்காலியின் விளிம்புக்கே வந்து விட்டாள். இதயத் துடிப்பு அதிகமாகியது.

வெளி நாட்டு மந்திரி விஜயம், உள்நாட்டு மந்திரி வெளி நாடு பயணம், பிரதம மந்திரி வெள்ளக் காட்சியை ஹெலிகாப்டர் மூலம் பார்ப்பது, ஒரு ஆஸ்பத்திரியை ஜனாதிபதி திறந்து வைக்கும் காட்சி...

நித்யா பொறுமை இழந்தாள். தினமும் இதையே பார்ப்பது என்றால்....?

நித்யா காத்திருந்தாள். திடீரென்று சோக கீதம் பின்னணி இசையாக ஒலித்தது. இரண்டு மூன்று யானைக் குட்டிகள் சண்டை போட்டுக் கொண்டு, முட்டிக் கொண்டே இறந்து விழுந்தது போல் ரயில் பெட்டிகள். பயங்கர ரயில் விபத்து.

நித்யாவின் கண்களில் நீர்த் திரைகள். அடுத்தது ஆஸ்பத்திரிக்காட்சி. ரயில் விபத்தில் மாட்டிக் கொண்டவர்களில் சிலர் சிகிச்சை

பெறும் காட்சி. அதில் ஓரிருவர் பேட்டி கொடுக்கும் காட்சி.

அதோ... அதோ முகம் முழுக்கக் கட்டுக்களுடன், இடது கையிலும், வலது கையிலும் பெரிய கட்டுக்கள் போடப்பட்டு, காலே உயரத் தூக்கிக் கட்டி—

வாய் திறந்து மெல்ல...மெல்லப் பேசும் பாஸ்கரனின் முகம்... ஒரு தடவை குளோஸப் காட்சி—

நித்யா புடவைத் தலேப்பால் வாயைப் பொத்திக் கொண்டு அழுதாள்.

''ஐயோ... ஆறு மாதம் சேர்ந்து வாழ்ந்துட்டு இப்படித் திடீர்னு போயிட்டீங்களே.. விபத்து நடந்து பத்து நாளிலே பூவைப் பறிச்சுட்டீங்களே...'' மனத்துக்குள் மயான ஓலம். ''உங்கள் முகத்தையும், பேச்சையும் கேட்கவேதினமும் வர்றேன்...அதுவும் இன்னியோட சரி: நாளைக்கு இந்த நியூஸ் ரீலே மாத்தறுங்களாமே!''

நித்யாவுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது.

பின் சீட்டிலிருந்து, ''யோவ் போறும்யா பேஜாரு பிடிச்ச ஆக்ஸிடெண்ட்... படத்தை ஜல்தியா ஆரம்பிடா...'' என்ற குரல் கேட்டது.

தொடர்ந்து அசிங்கமான வார்த்தைகளுடன் சிரிப்பு.

நித்யா அழுதுகொண்டே இருந்தாள்.




இந்த வீட்டின் சன்னல் வழியாக ஒரு திருடன் புகுந்து, உள்ளே உள்ள சில பொருட்களைத் திருடிச் சென்றுவிட்டான். அவனது காலடித் தடம் (பூட்ஸ் மார்க்) உள்ளது.

கீழே புகழ்பெற்ற மூன்று திருடர்களின் காலடிகள் கொடுக்கப் பட்டுள்ளன. அவர்களில் இந்த வீட்டில் திருடியது யார், கண்டு பிடியுங்கள்!

[illegible]

பல் டாக்டர்கள் கூறுகிறார்கள்

பற்கள், ஈறுகளின் முறையான பராமரிப்பிற்கு, பற்களை பிரஷ் செய்வது போன்றே ஈறுகளைத் தேய்த்துக் கொடுப்பதும் அவசியமாகும்

# போர்ஹொன்ஸ் டபிள் ஆக்ஷன் டூத்பிரஷ் உபயோகியுங்கள்

இது உங்கள் பற்களை பிரஷ் செய்யும்போதே ஈறுகளையும் தேய்த்துக் கொடுப்பதற்கேற்ப விசேட முறையில் உருவாக்கப்பட்டது

மென்மையான
வெண்ணிறக்
குச்சங்கள் உங்கள்
ஈறுகளைத் தேய்த்துக்
கொடுக்கின்றன

உறுதியான
நீல நிறக்
குச்சங்கள்
உங்கள் பற்களைத்
துலக்குகின்றன

## போர்ஹொன்ஸ்
## டூத்பிரஷ்

குடும்பத்தினர் எல்லோருக்கும்
அடல்ட் (மீடியம், சாஃப்ட்),
ஜூனியர், பேபி




"தலைமுறை தலைமுறையாக மக்கள் பயன்படுத்திவரும் இந்திய மருந்துகளின் சக்தியே தனி...

அவற்றுள் தனிச்சிறப்பு வாய்ந்தது அமிர்தாஞ்சன்."

தலைமுறை தலைமுறையாக மக்கள் நம்பிக்கையோடு பயன்படுத்திவரும் அமிர்தாஞ்சன் பத்து மருந்துப்பொருள்கள் அடங்கியது. இவை பத்தும் இயற்கையின் அற்புதமான சக்திவாய்ந்த மருந்துகள். அதனால்தான் அமிர்தர்ஞ்சன் ஒரு சக்திமிக்க வலி நிவாரணியாக விளங்குகிறது.

இதன் பயனாக தலைவலி, ஜலதோஷம், உடல்வலி, சுளுக்கு இவை எல்லாவற்றுக்குமே அமிர்தாஞ்சன் விரைவாக நிச்சயமாக நிவாரணம் அளிக்கிறது. அமிர்தாஞ்சன் உபயோகிப்பதால் ஆபத்து இல்லை. இதனால் வேறு தீய விளைவுகள் எதுவும் ஏற்படாது.

**அமிர்தாஞ்சன் — 80 ஆண்டுகளுக்கும் மேலாகப் பல குடும்பங்களில் பயன் பட்டுவரும் நம்பகமான மருந்து.**

AM-2148

# அமிர்தாஞ்சன்

**தலைவலி. ஜலதோஷம். உடல்வலி. சுளுக்கு — அனைத்தையும் போக்க அருமையான மருந்து.**



# அய்யம்பேட்டை அய்யாசாமி





சமீபத்தில் மவுண்ட் ரோடு வழியாகப் போய்க் கொண்டிருந்தபோது, சிறுத்து வத்தலான ஓர் உருவம் என் முன்னால் வந்து நின்று வழிமறித்ததும் அசந்து போனேன். அய்யம்பேட்டை அய்யாசாமியேதான்!

''என்ன ஓய், ரொம்ப நாளாக் காண லியே! எங்கே போயிருந்தீர்? நெஜமாவே ரீல் விடாதேயும்!''

''ஹி...ஹி... அன்டார்டிக்காவுக்கு யாத் திரை போயிருந்தேன், நம்ம ஸயன்டிஸ்டுகள் கூடத்தான். நியூஸ் படிக்கலேயா?''

''திடீர்னு அன்டார்டிக்காவா? அதுதான் குளிரில் ஊறப்போட்ட டொரங்காய் மாதிரி சிறுத்துவிட்டீர்...ஆமா. திடீர்னு போகக் காரணம்?''

''விஞ்ஞான ஆராய்ச்சி மீதுள்ள பற்று தல்தான்!''

''அடி சக்கை... சிரிக்கிறீரே!''

''சொன்னால் நீரும் சிரிப்பீர் ஸ்வாமி! சிரிக்க மாட்டீரே?''

''அட, சொல்லுமய்யா!''

''எனக்குத் திடீர்னு கல்யாணமாயிட் டுது!''

''ஓ! அட அட அட!''

''மாமியாரும் கூடவே தனிக் குடித் தனத்துக்கு மனைவிக்கு ஒத்தாசையா வந் துட்டாளா... வீட்டிலே ஒரே 'ஒசிபிசா' அமர்க்களம்தான்! கொஞ்ச நாள் தப்பிக் கத்தான் திடீர்னு 'விசிட்' அடிக்க வந் துட்டேன்.''

''சரி... உண்மையைச் சொல்லும்.. மொத மொதலா அன்டார்டிக்காவுலே கால் வெச்சதும் என்ன தோன்றியது?''

''உம்ம நினைப்புத்தான் வந்தது.... நெஜமா....மார்கழி மாசம் குளிர் பஜனைக் கோஷ்டியிலே பல்லெல்லாம் தனியாவர்த்தனம் ஆட நாம் ஜாலியா பஜனைக்குப் போவோமே... அங்கேயும் ஒரு அய்யம் பேட்டை பஜனைக் கோஷ்டியோட பிராஞ்சு இருந்தா எப்படி இருக்கும்னு தான் தோணித்து ஸ்வாமி!''

''சரி, சாப்பாட்டுக்குக் கஷ்டப்பட்டிருப்பீரே?''

''என் பாட்டிதான் ஒரு கிலோ வடகமும் அரிசி வத்தலும் மிளகாய்ப் பொடியுமா கட்டிக் குடுத்திருந்தாளே... ஒரு சங்கதி ரகசியமாச் சொல்றேன்... அண்டார்டிக்காவுலே மனித நடமாட்டமே கிடையாதுன்னு ஒரு வதந்தி உலாவறது... இது பொய்... நம்ம ஸ்கூல்லே படிச்சுக்கிட்டிருந்தானே, ஒரு மலையாளப் பையன் சங்குண்ணிக் குட்டி நாயர், அவன் எங்கே இருக்கான் இப்பத் தெரியுமா? ஜாம் ஜாம்னு ஒரு ஐஸ் குகையிலே ராந்தல் வெளக்கை வச்சுக்கிண்டு சயம் போன கெட்டிலும் கரி அடுப்புமா மசாலா டீ அடிச்சுக்கிட்டிருக்கான் ஸ்வாமி. என் கண்ணாலேயே பார்த்தேன். நாட்டுக்கு வந்து போக அவனுக்கு 'லீவு' இல்லியாம்! அந்த வெள்ளை பெங்குவின், கரடிங்கள்ளாம் அங்கே அவனைச் சினேகிதம் பிடிச்சுக்கிண்டு அவன் கிட்டேயே டீயை வாங்கிக் காசு தராமலேயே குடிச்சுட்டுப் போறதுகள். 'இன்று ரொக்கம் நாளை கடன்' அப்படின்னு போர்டு போடேண்டான்னு நான் அட்வைஸ் பண்ணினேன், கேட்டாத்தானே?''

''அப்படியா? பலே... அடுத்த 'டிரிப்' எப்ப?''

''இப்பத்தான் மாமியார் ஊருக்குப் போயிருக்கா... அவ திரும்பி வரத்துக்குள்ளே கிளம்பிடுவேன். அதோட ஒரு புரட்சித் திட்டமும் வச்சிருக்கேன், கையிலே!''

''என்ன, 'அண்டார்டிக்காவில் ஆயிரம் இரவுகள்'னு புஸ்தகம் எழுதப் போறீரா?''

''புத்தகம் என்ன, படமே எடுக்கப் போறேன், ஸ்வாமி! நம்ம பாரதிராஜா கூட அப்பாயிண்ட்மெண்ட் வாங்கியிருக்கேன். அடுத்தவாட்டி அவரை நான்தான் கூட்டிக்கிண்டு போகப் போறேன்... என்னமா லொக்கேஷன் ஷூட்டிங் நடத்தலாம் தெரியுமா, 'கார் சேஸிங்குக்குப் பதில் பனிச் சறுக்கலையே வெச்சு விளாசிடலாம்... சரி... பாக்கெட்டில் என்ன சில்லறை வச்சிருக்கீர்? ரொம்ப நாளைக்கப்புறம் நாயர் கடை பஜ்ஜி சாப்பிடணும்னு நாக்கைப் பிடுங்கறது....''

நான் நழுவ ஆயத்தமானேன்....




















● 'எம். பி.'யாகியிருக்கும் நடிகர் திலகத்துக்குப் பலமான பாராட்டுத் தெரிவித்துக் கௌரவித்திருக்கிறீர்கள். (தலையங்கத்திலும்!) ஆனால் பேப்பரில் பார்த்தால் முதல் நாளே ''காங். உறுப்பினர்கள் வரிசையில் அமர்ந்தார்'' எனப் படிக்கிறோம்.! கலை உலகிற்குச் சேவை ஏதேனும் செய்யப்படுமா அல்லது இந்திரா காங்கிரஸின் மற்றொரு எம். பி.யாக இருப்பாரா? பார்க்கவேண்டும்.

இளியநல்லூர் எஸ். ஜனு

● கலை உலகம் களிக்கிறது! ஆம். கலைத் தாயின் தலைமகனாகத் திகழும் நடிகர் திலகம் சிவாஜிக்குக் கிடைத்திருக்கும் இந்தப் பெருமை (எம்.பி.) தமிழருக்கும், தமிழ்ச் சமுதாயத்துக்கும் உவகையூட்டும் ஒரு விஷயம்தான். சிவாஜிக்குத் தக்க யோசனை கூறி அவரைச் சிந்திக்கவும் வைத்திருக்கிறீர்கள். அவர் கலை உலகுக்கு ஆற்ற வேண்டிய பணிகளைப் பற்றியும் கடமைகளைப் பற்றியும் சுட்டிக் காட்டியிருக்கிறீர்கள். அவைகளை அவர் கருத்தில் கொண்டு கலை உலகுக்குப் பெருமை தேடித் தருவார் என்று நம்புவோமாக!

வீரபாண்டி. வதிலை அன்புச் செல்வன்

● அகஸ்தியனின் ஆஸ்பத்திரி டயலாக் அற்புதம். ஆஸ்பத்திரியின் ஓர் ஓரத்தில் நின்று கொண்டிருப்பதைப் போல் ஒரு பிரமை ஏற்பட்டது. பினைல் நெடி ஒன்றுதான் குறை.

சென்னை-82 பாலாஜி ராஜா

● இரயில்வே கட்டண உயர்வு பற்றிய கார்ட்டூன் அபாரம். இதை அட்டைப்பட ஜோக்காக வெளியிட்டிருக்க வேண்டும். வயிற்றெரிச்சல் தீரச் சிரித்தேன்.

மதுரை நாகு வேலன்

● சிறுவன் சீனிவாசனின் துர்மரணம் அதிகாரிகளின் சிறுமைக்கு மற்றுமொரு சான்று. உயிர் காக்க உறுதி எடுக்கும் மருத்துவ அதிகாரிகள் உரிய நேரத்தில் உதவவில்லை என்பதைப் படித்ததும் வருத்தமாகவும் கோபமாகவும் இருந்தது. இராம. அரங்கண்ணலின் பணி பாராட்டுக்குரியது.

சென்னை-45 கணபதி சுப்பிரமணியம்

● ஆளைப்பட்ட இராம அரங்கண்ணலுக்கே இத்தனை தடங்கலென்றால் நடுத்தரம், ஏழை என்ற விகிதத்தில் உள்ள பொது மக்கள் உதவி செய்திருந்தால் இன்னும் எப்படி இருந்திருக்கும்!

வியாசர் காலனி மஞ்சுளா பாய்

● ''தங்கமானவனுக்கு என் தங்கை'' கதை மூலம் ஆயிரம் ஹிந்து ஒற்றுமை எழுச்சி மாநாடு நடத்தினாலும் பயனில்லை. மத மாற்றத்தைத் தடுக்க நமக்கு மனமாற்றம் தேவை என்று உணரச் செய்து விட்டார் சங்கரன்.

கொளத்தூர் கே. கணேசமூர்த்தி




● ''அன்னமே வா!'' கதை முடிவில் அழுதே விட்டேன். குழந்தைப் பாசத்தின் உச்ச நிலை. தாய்மையின் தனிப் பெருமை. ஆசிரியருக்கு என் மனமுவந்த பாராட்டுகள்.

மதுரை-16 விசு

● நீலகிரி மாவட்ட ஆட்சித் தலைவர் திருமதி ஜெயந்தி அவர்களைப் பற்றியும், பொது நலமே தன் நலமாகத் தொண்டாற்றி வரும் ''நிபந்தனை மனிதன்'' ஏழைத் தலைவன், டாக்டர் காணிக்கராஜைப் பற்றியும் வெளியான சுவையான செய்தியினைப் படித்து நீலகிரி மக்கள் பெரு மகிழ்ச்சியும் ஆனந்தமும் அடைந்தோம்.

எங்கெல்லாம் மக்களின் கூட்டம் உள்ளதோ அங்கெல்லாம் இந்த நிபந்தனை மனிதன் டாக்டர் காணிக்கராஜ் இருப்பார். அவரால் பயன்பட்டோர் ஏராளம். இனிய சுபாவம்; எளிமையான வாழ்க்கை; உயர்ந்த எண்ணங்கள் கொண்ட அந்த டாக்டரைப் போன்றவர்களைப்பற்றிப்பத்திரிகைகள் எழுதுமானால் அது பொதுச் சேவையில் ஈடுபடுவோர்களுக்கு, அரசியல் கலவா சேவை புரிவோர்களுக்கு மேலும் ஊக்கத்தையும் ஆக்கத்தையும் தரும்.

ஊட்டி சி. குமாரவேல்

''எல்லோரும் கொசுத் தொல்லைன்னு கவலைப்படுவாங்கன்னு பேரு! நீ மகிழ்ச்சியா இருக்கியே?''

''கொசுத்தொல்லைக்குப் பயந்து விருந்தாளிகள் வரதேயில்லை! அந்தப் பட்டாளத்தோட தொல்லைக்கு இந்தத் தொல்லை தேவலை!'' – அறிவுடைநம்பி



# நினைவெல்லாம் நித்யா

10

கதை: அபர்ணா நாயுடு

சித்திரம்:



























அடுத்த கணம் —



தொடரும்

பழமையும் புதுமையும்
இழைய இழைய
உங்களிடம்
அறிமுகமாகும்
கோ-ஆப்டெக்ஸ்
புதிய படைப்பு

# அயோத்தியா

பருத்திச் சேலைகள்.

சேலத்திற்கு கிழக்கே அரூர் நெடுஞ்சாலையில்
எட்டுகிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது
அயோத்தியா பட்டணத்தில்

சேலம் வடிவமைப்பு பணிமையத்தில்
உருவாக்கப்பட்டு உங்களால்
தேர்ந்தெடுக்கப்பட்ட சேலைகள்.

கணினிமயப்படுத்தப்பட்ட எல்லா கோ-ஆப்டெக்ஸ்
விற்பனை நிலையங்களிலும் கிடைக்கும்.



கோ-ஆப்டெக்ஸ்
கைத்தறி

● வறுமை! வடித்த கஞ்சியைத் 'துணிக்கு வேண்டும்' என்று கேட்டு மூடி மறைத்துக் கூழாக்கிக் குடிக்கும் கேவலம். கந்தல் சட்டையுடன் கடற்கரையில் உலவும் ஏழ்மை! இத்தனைக்கும் மீறி அவனிடம் தெரியும் இசைஞானம்.

எல்லாம் சேர்ந்து ராதாவைக் (காதலிக்க வைக்கிறது. பயணத்தின் முதல் கட்டம் இதுதான்.

கோவிலில் பாடி, டி. வி.யில் தோன்றிப் புகழ் பெற்று, சினிமாவில் பின்னணிப் பாடகனுகப்பிரபலமடைந்த பிறகு அந்தப் புனிதமான காதலுக்குக் குறுக்கே வில்லனுகத் தோன்றுகிறது 'லொக் லொக்'! காதலியைக் கண்டால் முகத்தைத் திருப்பிக் கொள்கிறுன். காரணம், சினிமா உலகுக்குப் புளித்துப் போன 'பிளட் கான்சர்'தான் என்று தெரிய வரும்போது எரிச்சல் எரிச்சலாக வருகிறது.

மோகனும் பூர்ணிமா ஜெயராமனும் சோகத்தில் நெஞ்சத்தைக் கிள்ளி எடுத்து விடுகிறுர்கள்.

அலட்டிக்கொள்ளாத இயற்கையான நடிப்பில் சேகர் நம் கவனத்தைக் கவர்கிறுர்.

கலகலப்புக்குக் கவுண்ட மணி. வாடகை வசூலிக்க முடியாத அவரது அங்கலாய்ப்புகள் கொட்டை எழுத்து விக்கிரமாதித்தன் கதை மாதிரி மனத்தில் பதிகிறது.

ஒளிப்பதிவாளர் கஸ்தூரி, டைரக்டர் ஆர். சுந்தரராஜன் இருவருடைய சுலை உலகப்'பயணங்கள் முடிவதில்லை' தொடரும்.



## ஜி. ஜி.

ஜெமினி கணேசன் — ஜி. ஜி. அவர் தொடங்கியுள்ள மருத்துவ மனை ஜி. ஜி. திரைப்படத்தில் நடிக்க முன்வந்திருக்கும் அவர் மகளுக்குத் திரை உலகப் பெயர் ஜி. ஜி.

ஆனால் ஜெமினி இதை மறுக்கிறார். ஜி. ஜி. என்பது ஒரு பிரெஞ்சுப் பெயராம். Gigi என்று எழுத வேண்டுமாம். ''இந்தப் பெயரில் ஒரு ஆங்கிலத் திரைப்படம் கூட வந்ததே நினைவில்லையா?'' என்று கேட்கிறார்.

## சாந்தாராம் வியந்தார்!

பரணி ஸ்டுடியோவுக்குள் குழந்தைகள் பட்டாளம். நாற்காலியில் அமர்ந்தவாறே பானுமதி ஸ்கூல் டீச்சர் மாதிரி அவர்களை மேய்த்துக் கொண்டிருந்தார். 'பக்த துருவ மார்க்கண்டேயா' படப்பிடிப்பு.

வம்சி கிருஷ்ணா என்கிற ஐந்து வயதுக் குழந்தை பானுமதியிடம் வந்து ''எனக்கு ஷூட்டிங் முடிஞ்சிடிச்சி. நான் மேக்கப்பைக் கலைக்கட்டுமா?'' என்று மழலை உதிரக் கேட்டான்.

''ஏண்டி! உனக்கு ஷூட்டிங் முடிந்ததுன்னு யார் சொன்னாங்க? இந்தப் படத்துக்கு நீ டைரக்டரா நான் டைரக்டரா? இன்னும் எடுக்கப் போறேன். ஏன் பசிக்குதா?'' என்றார்.



காமிராவைச் சுற்றி



குழந்தை தலையை ஆட்டி 'ஆமாம்' என்றதும் தனக்கென்று அருகில் வைத்திருந்த பாலை எடுத்து வம்சியிடம் கொடுத்து ''இந்தா இதைக் குடி. கொஞ்சம் பசி அடங்கும். இன்னும் கொஞ்ச நேரத்தில் சாப்பிடலாம்'' என்றார் செல்லமாக. பிறகு என்னைப் பார்த்து ''இந்தக் குழந்தைதான் துருவனாக நடிக்கிறாள்'' என்றார்.

மேக்கப் அறையில் எட்டிப் பார்த்தால் எனக்குப் பழக்கமான கதாசிரியை ஒருவர் நாற்காலியில் அமர்ந்திருந்த ஒரு பெண்ணின் தலையை வாரிக் கொண்டை போட்டுக் கொண்டிருந்தார். இவர் எப்பொழுது ஹேர் டிரஸ்ஸராகமாறினார்என்று அருகில் போனால் ''என் மகள் ராஜ சியாமளா இந்தப் படத்தில் மார்க்கண்டேயனின் அம்மா மருத்துவதியாக நடிக்கிறாள். பானுமதி படம் என்பதால் ஒப்புக்கொண்டேன்'' என்றார். அவர்—

வேறு யாருமல்ல. நாவலாசிரியை லட்சுமி ராஜரத்தினம்தான்.

ராஜ சியாமளா நல்ல அழகு. பேசும் கண்கள். எடுப்பான மூக்கு. உயரம். 'யெஸ்' என்று சொன்னால் போதும் சினிமா உலகில் கதாநாயகியாகக் கொத்திக்கொண்டு போய் விடுவார்கள் என்று நினைத்துக் கொண்டேன்.

படத்தைப் பற்றிப் பானுமதி சொன்னார்: குழந்தைகள் பட இயக்கத்தலைவர் வி.சாந்தாராமுக்குக் கடிதம் எழுதியிருந்தாராம். அவர், ''தாங்கள் துருவனையும் மார்க்கண்டேயனையும் இணைத்து எப்படிக் கதை அமைத்திருக்கிறீர்கள்? அதெப்படிச்சாத்தியமாகும்?'' என வியப்புத் தெரிவித்துப் பதில் எழுதியிருக்கிறாராம்.



## அடுத்து. 'ரங்கா'!

● தமிழ் சினிமா — உலகில் பில்லா ஏற்கனவே வந்துவிட்டுப் போய் விட்டார். அடுத்து 'ரங்கா'வும் வரவிருக்கிறார். ரஜினிதான் ரங்கா. வழக்கமான தேவர் பிலிம்ஸ் கதை மைனஸ் மிருகம். டைரக்டர் தியாகராஜன்சொன்னார்: ''அண்ணா சாலையில் ரஜினிகாந்த் ராதிகா இரண்டு பேரும் நடிக்கும் பாடல் காட்சியைப் படம் பிடிக்கையில் ஏற்பட்ட அவஸ்தை இருக்கிறதே! போகிற வருகிற பஸ், டாக்சிக்காரர்கள்கூட நிறுத்தி வேடிக்கை பார்க்க ஆரம்பித்து விட்டனர். ரஜினி ராதிகா இரண்டு பேரையும் மறைவிடத்தில் வைத்து, எல்லாம் ரெடியானதும் போன் செய்வோம். இரண்டு பேரும் ஸ்பாட்டுக்கு வந்து காட்சியில் நடிப்பார்கள். ரசிகர் கூட்டம் சேர்ந்ததும் காரில் ஏறிப் பழைய படி மறைவாகப் போய்விடுவார்கள். இனிமேல் மௌண்ட் ரோடில் ஷூட்டிங்கே வைத்துக்கொள்வதில்லை எனத் தீர்மானித்துவிட்டேன்.''

— எஸ். சந்திரமௌலி




காட்டி அவர்களது வெறுப்பைத் தேடிக் கொண்டுள்ளார் தேவராஜ்.

காதலி கொடுக்கும் கற்களை வாயில் போட்டுக் கொண்ட கதாநாயகன் அதைக் கற்கண்டாகச் சுவைப்பதாகவும், கையில் உதிர்ந்த சருகுகளை எடுத்து அவள் ஊதியதும் அவை பற்றி எரிவதாகவும் காட்டியிருக்கிறார் டைரக்டர். கூடவே ஒரு விளக்க வாசகமும் எழுதிக் காட்டியிருக்கலாம்.
தலைப்பில் உள்ள கிளுகிளுப்பு படத்தில் இல்லை.

● ● ● ●

● சீனியர் வக்கீலுக்கும் ஜூனியர் வக்கீலுக்கும் இடையில் எழுந்த மோதலில் ஒரு பெண்ணின் காதல் சின்னா பின்னப் படுகிறது. ஜூனியர் தன் காதலை மூட்டை கட்டி வைத்து விட்டுச் சவாலுக்கு நிற்கிறான். சவால் நிறைவேறுவதற்குள் அந்தப் பெண் வேறொருவனுக்கு வாழ்க்கைப்பட்டுக் கொடுமைப் படுத்தப் படுகிறாள். ஜூனியர் அவளைக் காப்பாற்ற விரைவதற்குள் அவளே தன் கணவனைக் கண்ணாடித் துண்டால் குத்திக் கொன்று விடுகிறாள். விதவையான அவள் உரிய தண்டனை பெற்றுத் திரும்பியதும் மனைவியாக ஏற்றுக் கொள்கிறான் ஜூனியர்.

கதையின் மையம் கதாநாயகனை விட்டு விட்டு வில்லனிடம் (ஜோஸ்) போய்விடுகிறது. என்றாலும் சிவகுமார் நடிப்பில் குறை வைக்கவில்லை.

ராதா கணவனின் கொடுமைகளை அப்பாவிடம் சொல்லத் துடிக்கும் ஒவ்வொரு கட்டத்திலும் '47 நாட்கள்' படம் நம் நினைவுக்கு வருகிறது. மனைவியைச் சிகரெட் நெருப்பால் சுட்டுத் துன்புறுத்தும் கணவனை 'இரயில் பயணங்களில்' பார்த்திருக்கிறோம்.

படத்தில் பெரும்பாலான இடங்களில் விரசத்தைக் காட்டியிருக்கிறார் டைரக்டர்.

மகேந்திரன் — ஸ்மிதா மாட்டுக் கொட்டகைக் காதல்....

ஓர் இளம் பெண் ஓடிப்போய் நடுரோட்டில் ஆடவனைக் கட்டிப் பிடித்து முத்தம் கொடுப்பது...

ராதாவின் இளவயதுப் போட்டோவை க்ளோசப்பில் நிர்வாணமாகக் காட்டியிருப்பது...

பலர் முன்னிலையில் கட்டிய கணவனே மனைவியை முந்தானையைப் பிடித்து இழுத்துப் பிறந்த மேனியோடு அவளை மது ஊற்றச் சொல்வது...

பெண்களுக்குப் பிடிக்காத இத்யாதி... இத்யாதி... காட்சிகளைப் படத்தில்




● ஏழைகளுக்காகக் கொடி உயர்த்தும் மூவரை (விஜயகாந்த் — ஜெய்சங்கர் — ஸ்மிதா) எப்படிப் பணக்காரர்கள் ஒடுக்க நினைக்கிறார்கள் என்பதை 'டிஷ்யூ... டிஷ்யூ...' மூலம் காட்டிப் பிரமிக்க வைக்கிறார்கள்.

விஜயகாந்தின் நடிப்பில் வீரம் நிமிர்ந்து நிற்கிறது. சண்டைக் காட்சிகளில் இன்றைய இளம் கதாநாயகர்களுள் இவரை மிஞ்ச யாரும் இல்லை என்கிற அளவு நடித்திருக்கிறார்.

ஸ்மிதா ஐப்பசி மாத மழை மாதிரி கவர்ச்சியைக் கொட்டியிருக்கிறார். நடிப்பிலும் நான் சோடை போனவள் இல்லை என்பதை அந்த வலிப்புக் காட்சியில் நிரூபித்து விட்டார்.

மூன்று சக்கர வண்டியில் ஊர்ந்து வரும் முடமாக வரும் ஜெயசங்கர் தாடி பொருந்தியிருக்கிற மாதிரி நடிப்பையும் பொருந்தச் செய்துள்ளார். உட்கார்ந்தபடியே அத்தனை குண்டர்களையும் அவர் வெறும் தடியால் விரட்டி அடிக்கிறாரே அதைத்தான் நம்ப முடியவில்லை.

வில்லனாக வரும் கௌரி கவனத்தைக் கவர்கிறார். எஸ். எஸ். சந்திரன் எந்தப் படத்தில் வந்தாலும் அரசியல் வாதிதானா?

ஒத்தடம்: ஸ்மிதாவுக்கு விஜயகாந்த் கொடுப்பது மட்டுமல்ல. டைரக்டர் சந்திர சேகர் ரசிகர்களுக்கும் கொடுத்திருக்கிறார். மசாலா ஒத்தடம்.



வருமான வரி செலுத்துவோர் கவனத்திற்கு!
நடப்பது "மார்ச் மாதம்" என்பது
நினைவிருக்கட்டும்!!

இன்றே

# 15 வருட பப்ளிக் பிராவிடண்ட் நிதியில் முதலிட்டு வருமான வரிச்சுமையை குறையுங்கள்

முழு விவரங்களுக்கு

- பாரத ஸ்டேட் வங்கி மற்றும் அதன் கிளைகள்
- தலைமை அஞ்சலகங்கள்
- சிறு சேமிப்பு இயக்குநர்

143, அண்ணா சாலை, சென்னை-600 002

# உங்களுடைய முதலீடு இரட்டிப்பு ஆகவேண்டுமா?

அஞ்சலகம் உங்களுக்காக ஆறு வருடங்களில் தேசிய சேமிப்பு பத்திரம் VI வது வெளியீட்டின் மூலம் இரட்டிப்பாக்க காத்திருக்கிறது.

ரூ. 100-00 முதலிட்டு
ரூ. 201-50 திரும்பப் பெறுங்கள்

மேலும் விவரங்களுக்கு

- உங்களுடைய அருகாமையிலுள்ள அஞ்சலகம்
- சிறு சேமிப்பு இயக்குநர்

143, அண்ணா சாலை
சென்னை-600 002

I.P.-DIPR

# 10

நெற்றி ஓரத்தில் பிளாஸ்திரியை ஒட்டிக் கொண்டு மாரப்பன் கிரிதரனின் கைத்தாங்கலில் தள்ளாடியபடி சிறிது நேரத்தில் உள்ளே வந்தான்.

''நல்ல வேளை.... எலும்பு ஏதும் முறியலேன்னு டாக்டர் சொல்லிட்டார். நெத்திக் காயம் அப்படி ஒன்றும் பெரிசா இல்லையாம். அதனாலே ஒரே ஒரு தையல் போட்டிருக்கார்... அந்த வேப்பங்கிளை என்னைக் கீழே தள்ளினாலும் ஒரு வழியிலே அவைக் கிருப்பலே காப்பாத்திட்டதுங்க. இல்லாட்டி மண்டை சிதறிப் போயிருக்குமாம்.''

''மாரப்பா... சாமி புண்ணியத்திலே நீ பெரிய கண்டத்திலேருந்து தப்பினே. சமயத்துக்கு டாக்டர் வந்து உதவினதும் நல்ல அதிர்ஷ்டம்தான். அடுத்த வாரம் நீ தோட்ட வேலைக்கு வரவேணும். இந்தா இதை விட்டுச் செலவுக்கு வச்சுக்கோ. பேசாம ஒரு வாரம் ஓய்வா படுத்துக்கப்பா'' அனுதாபத்துடன் பேசிய அத்தை தயாராக ஒரு கடித உறையில் போட்டு வைத்திருந்த இருபது ரூபாய்களை அவனிடம் கொடுத்தான்.

''கொஞ்சம் ஏதாவது வயித்துக்குச் சாப்பிட்டுட்டுப் போகலாம். அவசரப் படாதே'' என்று சந்தியா உபசரித்ததைக் கேட்டு மாரப்பன் சிரித்தான்.

''விறகு வெட்டிக்குப் பிளவை வந்தால் விறகால ரெண்டு தட்டுத் தட்டனும்பாங்க. அது போல என்னைப்போல உழைப்பாளி கட்டிலே படுத்திருந்தா கட்டுப்படியாகுமா... இன்னிப் பொழுதுக்கு டாக்டர்சொன்னதைக் கேட்கிறேன். தையல் பிரிக்கிறவரை அவரைக் காலையிலே தினமும் போய்ப் பார்க்கிறேன். நாளைக்கு எழுந்து கோடாலியை எடுத்தா ஒரு கட்டு வெறக செத்த நேரத்திலே பிளந்து கட்டிடுவேன்'' வீரமாகப் பேசினான்.

''என் மோட்டார் சைக்கிள் பின்னாலே உட்கார்ந்துக்கோ... உன்னை வீட்டிலே கொண்டு விடறேன்.'' கிரிதரன் வற்புறுத்தியதை மறுத்தான்.

''கீழே விழுந்தப்போ எலும்பு முறிஞ்சு போனாப்பலே வலிச்சுது. பயந்திட்டேன். இப்போ தேவலே. சாப்பாடு எதுவும் வேணாம் அம்மா. வரும்போது கொஞ்சம் பழைய சோறு தின்னுட்டுத்தான் கிளம்பியிருந்தேன். அடுத்த வாரம் பழைய மாரப்பனா வந்து நிப்பேன். கவலைப்படாதீங்க. வரேன் அத்தையம்மா... வரேன் டாக்டர். வரேன் வாத்தியாரம்மா...'' விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டு விட்டான்.

முற்றத்தில் இறங்கிச் சோப்பைக் கையில் குழைத்துக் கொண்டு நின்றான் கிரிதரன். செம்பிலிருந்த நீரைத் தன் கைகள் மீது வார்த்த ஜெகதாவிடம் அவன் வேடிக்கையாகப் பேசினான்.

''ஜலம் ஓடும் சாலகத்துப் பக்கத்திலே பாசி ஒரேமுட்டாப் பிடிச்சுக் கிடக்கு... கொஞ்சம் பிளீச்சிங் பவுடர் வாங்கிப் போட்டுத் தேச்சுக் கழுவச் சொல்லுங்க...





இல்லாட்டி வாத்தியார் அம்மா சறுக்கி விழுந்துட்டாங்கன்னு நான் மறுபடி இங்கே சிகிச்சைக்கு ஓடிவர நேர்ந்திடும்...'' சிரித்தான்.

''காப்பி மட்டும் போதும்; பூதலூர் ஹோட்டலில் காலை காப்பி டிபன் முடிச்சுக் கொண்டுதான் கிளம்பி வந்திருக்கேன்....'' கூறிவிட்டுக் கைக்குட்டையால் கரங்களைத் துடைத்துக் கொண்டான். மேஜை மேல் சந்தியா கொண்டு வந்து வைத்த காப்பியை வேகமாகப் பருகி முடித்தான்.

அத்தையம்மாளால் அந்தக் கேள்வியை அதற்கு மேல் தன்னுள் அடக்கிக் கொள்ள முடியவில்லை.

''தம்பி! நேத்து எங்க வீட்டு மருமகன் குமரேசன் உங்க கிளினிக்குக்கு எதுக்காக வந்தாராம்... அவருக்கு உடம்புக்கு ஏதாச்சும் கோளாறு?'' — கேட்டுவிட்டு ஆவலுடன் அவன் முகத்தைப் பார்த்தாள். அவன் என்ன பதில் அளிக்கப் போகிறான் என்ற எதிர்பார்ப்பில் சந்தியாவின் மார்பு படபடத்தது.

''அவருக்கு உடம்பு ஏதாவது கோளாறாக இருந்து என்னைத் தனிப்பட்ட முறையில் கலந்து ஆலோசிக்க வந்திருந்தால்—என்ன தான் நீங்க அவருக்கு உறவு என்றாலும் நான் அவரது வைத்தியர் என்ற முறையில் அதைப் பற்றி விமரிசிப்பது தவறு. பேச மாட்டேன். அப்படிச் செய்வது என் தொழிலை அவமதிப்பதாகும்.''

# சாதாரண மனிதன்

## 'லக்ஷ்மி'

''சந்தியாவின் அக்கா புருஷன் — எங்க வீட்டு மருமகன். அதனால் பயந்துபோய்க் கேட்டேன் தம்பி. தவறாக நினைக்காதீங்க.''

''அவர் வந்த காரணம் வேறு. அதைப் பற்றி உங்களிடம் சொல்வதில் எனக்கு மறுப்பில்லை. எனக்குப் பெண் பேசி முடித்துக் கல்யாணம் செய்து வைக்க என்னிடம் பேச வந்தார்.'' சிரித்துக் கொண்டே மருந்துப் பெட்டியைக் கையில் எடுத்துக் கொண்டான். கொஞ்சிக் குரைத்த ஸாம்சனைத் தட்டிக் கொடுத்துவிட்டு ''ஒரு சமயம் நாளை மறு நாள் உங்களைப் பார்க்க அவர் இங்கே வரலாம். மீதியை அவர் கிட்ட நீங்களே கேட்டுக்கலாமே... பாவம்... மனிதர் நல்ல எண்ணத்தோடு பெட்ரோலைச் செலவுசெய்து கொண்டு தமது நேரம் வீணாவதையும் பொருட்படுத்தாது வந்திருந்தார். மிகவும் மரியாதையாகப் பேசினார். எனது மோட்

டார் சைக்கின் பழுது ஆனால் தம்மால் விரைவாக ரிப்பேர் செய்து தரமுடியும், கவலைப் படக்கூடாது என்று உத்தரவாதமளித்தார். பழைய கார் வாங்க உத்தேசம் இருந்தால் அவருக்குக் கடிதம் எழுதிப் போட்டால் போதும். அல்லது டெலிபோனில் கூப்பிட்டாலும் போதும். கச்சிதமாக முடித்துக் கொடுக்கமுடியும்என்று தமது விசிட்டிங் கார்டைக் கொடுத்துவிட்டுப் போயிருக்கிறார்'' என்று கூறிவிட்டு அவன் வாயிற் பக்கம் திரும்பினான்.

''டாக்டர்! இந்த வாட்டி நீங்க கட்டாயம் பீஸ் எடுத்துக்கணும். மறுக்கக் கூடாது...'' — வற்புறுத்தலாக அத்தை ஜகதா அவன் கையில் ஒரு பத்து ரூபாய்த் தாளை வைத்து அழுத்தினாள்.

''மறுபடி நீங்க கூப்பிட்டா வர மறுத்துடுவேன்னு பயப்படறீங்க... சரி... ஏத்துக்கிறேன்.'' என்று சிரித்தபடி நோட்டைச் சட்டைப் பைக்குள் திணித்துக் கொண்டு அவன் வெளியேறிவிட்டான்.

'குமரேசனுக்கு என்ன இப்படித் திடீரென்று ஒரு யோசனை வந்திருக்கு?...'

அத்தை மெல்லிய குரலில் தனக்குள்ளே அதிசயப்பட்டுக் கொண்டாள்.

வாயிலின் முன்புறத்தைப் பெரியதொரு பந்தல் அடைக்க — முகப்பிலே வாழைக் குலையுடன் இரு மருங்கிலும் வாழை மரம் தெரிய, தோட்டப் பூவெல்லாம் பந்தலில் தோரணங்களாகத் தொங்க...சந்தியாவின் கற்பனை விரிந்து கொண்டு போக அவள் ஒரு கணம் மெய் மறந்து நின்றாள்.

''நல்ல ஜோடின்னு குமரேசனுக்குத் தோணிடுச்சு... அதனால்தான் தானே பேசப் போயிருக்கான்.''

''என்ன சொல்றீங்க அத்தை...'' மகிழ்ச்சியில் சந்தியாவின் குரல் நடுங்கியது.

''வீட்டை விக்காட்டிப்போகட்டும். தனியா நிக்க விடாம அந்தப் பொண்ணுக்கு ஒரு கல்யாணத்தைச் செஞ்சு வச்சு அந்தப் புண்ணியத்தையாவது கட்டிப்போம்னு குமரேசனுக்கு ஒரு நல்ல புத்தி தோணிட்டது.. உன்னைப் பத்திக் கடுகளவு அவன் மனத்திலே கருணை இருக்கே அது போதும்....'' உற்சாகமாக அத்தை பேசினாள்.

சந்தியாவின் நெஞ்சம் தாங்க முடியாத மகிழ்ச்சியால் திடும் திடும் என்று தாளமிட்டது.

பொழுது புலரத்தொடங்கிப் புது வெளிச்சம் பரவிக் கொண்டிருந்த சமயம். வாயிலில் போட்ட கோலத்திலிருந்து நிமிர்ந்த சந்தியா ஒரு கணம் திடுக்கிட்டு நகர்ந்து நின்றாள். அவளை இடித்துத் தள்ளாத குறையாக ஒரு படகுக் கார் வாசலில் வந்து நின்றது.

''என்ன அப்படிப் பார்க்கிறே? டவுனில் புதுசா மல்லிகான்னு ஒரு சினிமாக் கொட்டகை கட்டிக்கிட்டு இருக்காரே... நமக்குக் கூட தூர உறவுக்காரர் நாகசாமி. அவரோட புதுவாலியன்ட். ஒருசின்ன ரிப்பேர். ஓட்டிப் பார்த்துச் சொல்லுங்கன்னு கேட்டுக்கிட்டார். காரை எடுத்துக்கிட்டு அப்படியே ஒரு முக்கிய காரியத்தையும் கவனிக்க வந்திருக்கேன்.''

''அத்தை! சின்ன அத்தான் வந்திருக்கார்!'' ஆவலுடன் குரல் கொடுத்துவிட்டு விரைவாக உள்ளே சென்று விட்டாள்.

வேகமாகக் காலைக் குளியலை முடித்துக் கொண்டு மாற்றுடையில் அவள் வெளி வருவதற்குள் குமரேசன் தாழ்வாரத்தில் காப்பி பலகாரம் சாப்பிட இலை முன் உட்கார்ந்திருந்தார்.

''செடிகளில் ஒரு காய்கூடக் காணலையே. நேத்துப் பறிச்சு மார்க்கெட்டுக்கு அனுப்பிட்டியாமே... ஆமாம் மாரப்பனுக்கு மண்டையில நல்ல அடிபட்டு விட்டதாமே? தோட்டத்திலே ஏதாச்சும் காய்கள் இருக்கும் மறக்காமப் பறிச்சு எடுத்துக்குட்டு வான்னு உன் அக்கா.'' இலையில் சூடாக விழுந்த தோசையைத் தடவியபடி பேசினார் குமரேசன்.

''நீங்க வரப்போறது தெரியாது. இல்லாட்டா எடுத்து வச்சிருப்பேன். கொஞ்சம் தண்டுக் கீரை பறிச்சுத் தரேன். எடுத்துப் போங்க. நம்ப தோட்டத்துத் தண்டுக் கீரை வெண்ணெயாட்டம் இருக்கும்'' என்று சந்தியா அத்தை பக்கம் திரும்பினாள்.

''நீங்களும் உட்காருங்க அத்தை. நான் இரண்டு பேருக்கும் பரிமாறேன்.'' உபசரித்தாள்.

''குமரேசன் அவசரப்படுது. என்னவோ டாக்டர் ஸ்ரீதரனைப் பார்க்கணுமாம்... ரொம்ப முக்கியமான சங்கதியாம். முதல்லே அத்தானைக் கவனி. பிறகு நாம சாப்பிட்டாப் போச்சு...'' உற்சாகத்தில் ஒளிவிட்ட சந்தியாவின் கண்களை அர்த்த பாவத்துடன் அத்தை பார்த்து முறுவலித்தாள்.

''பழைய கார் ஏதாச்சும் டாக்டருக்கு விக்கப் போறீங்களா அத்தான்? பார்த்து நல்லதா — சரசமான விலையிலே வாங்கி உதவுங்கோ. ஆபத்துன்னு யாருக்கும் ஓடி வந்து உதவற நல்ல குணமிருக்கு அவருக்கு.'' சிபாரிசு செய்யும் தோரணையில் ஆரம்பித்தாள் சந்தியா.

''அந்த வீட்டில் மட்டும் போஸ்ட்மேன் ஞாயிற்றுக்கிழமை கூட தபால் கொடுக்கிறாரே! ஏன்?''

''போஸ்ட்மேனும், அந்த வீட்டுப் பெண்ணும் காதலிக்கிறார்கள்!''

-எஸ். மாரியப்பன்




டாக்டர் சார், உங்களுக்கென்ன ? சோணந்து புடிச்சமாதிரி டல்லா இருக்கீங்களே!
ராத்திரி-யெல்லாம் கொசுக்கடி 'SUCK-O-MANIA'விலே கஷ்டப்படுறேன்!


ஒரு அறையிலே 2000 கொசுக்கள் இருக்கின்றன... அதிலே 1000 பறந்துவிடுகின்றன... அப்புறம் 500 ஓடிவிடுகின்றன, பின்பு 500 பறந்து விடுகின்றன... மீதி என்ன இருக்கும்?
2000
-1000
500-500
ஒரே ஒரு டார்டாய்ஸ் கொசுவர்த்திச் சுருள் இருக்கும் சார்!


சார்... எனக்கு பீடிகூட வேணாம், வேண்டியதெல்லாம் ஒரு டார்டாய்ஸ் கொசுவர்த்தி சுருள்தான்!


புத்தம் புதுக் காலை, நீ வரும் வேளை... கொசு மறைந்திடும் வாழ்வு மகிழ்ந்திடும்...

கணப் பொழுதில் இரண்டு தோசைகளை வேகமாக விழுங்கிவிட்ட குமரேசன் மூன்றாவதாக இலையில் விழுந்த தோசை மீது கிண்ணத்திலிருந்த சாம்பார் அத்தனையையும் கவிழ்த்துக் கொண்டார். ''மிளகாய்ப் பொடி இருந்தாக் கொஞ்சம் கொண்டாந்து போடு. அப்படியே நெய் இருந்தாக் கொஞ்சம் ஊத்து'' கூறிவிட்டு 'ஹேவ்' என்ற சப்தத்துடன் ஏப்பம் விட்டுத் தமது வயிற்றை இடது கையால் தடவிக் கொண்டார்.

சட்டென்று எதையும் சொல்லிவிட மாட்டார். விஷயத்தைக் கேட்க ஆவலுடன் நிற்கும் எதிராளியைக் கிடுக்கியில் பிடித்துக் கொண்டு நெருக்கும் ஒரு தவிப்பிலே தொங்கவிட்டு வேடிக்கை பார்ப்பதில் குமரேசன் ஒரு ஸஸ்பென்ஸ் மன்னன். பிறர் தவிப்பை ரசிப்பதில் ஒரு குரூர திருப்தி.

சந்தியா மிளகாய்ப் பொடியை ஓரமாக இலையில் வைத்து நெய்யைத் தாராளமாக வார்த்தாள். காப்பியை நுரை ததும்ப டம்ளரில் கொண்டு வந்து அருகே வைத்தாள். அந்தக் காலை வேளையில் தமக்கு அந்த இரண்டு பெண்களின் மும்முரமான உபசரிப்புக் கிடைத்தது பற்றி உள்ளூற பரம திருப்தி.

கையைக் கழுவிக் கொண்டு சந்தியா கொண்டு வந்து தந்த துண்டில் கையைத் துடைத்துக் கொண்டார்.

அத்தை அவசரமாக உள்ளே ஓடிப் பகல் உணவுக்குப் பிறகுதான் வழக்கமாகப் போட்டுக்கொள்ள உபயோகிக்கும் தன்னுடைய வெள்ளி வெற்றிலைப் பாக்குப் பெட்டியை எடுத்துவந்து ஊஞ்சல் மீது வைத்தாள்.

''அந்தக் காலத்துப் பொருள் இன்னுனு கனமா செய்திருக்கான். இப்போ ஒரு வெற்றிலை பெட்டி செய்யச் சொன்னால் காத்துலே பறக்கும். அப்படி லேசா... தகட்டில் தட்டிக் கொடுத்திடுவான். வெள்ளியே வைரம் விக்கிற விலைக்கு ஏறிக் கிடக்கு...'' சொல்லிவிட்டுப் பெட்டியிலிருந்து ஒரு பிடி வாசனைப் பாக்கை அள்ளி வாயில் போட்டுக்கொண்டார். துளிர் வெற்றிலைகளாகப் பார்த்துப் பொறுக்கித் தமது மேல் துண்டால் துடைத்து விட்டு, சுண்ணாம்பை மெல்லத் தடவி நார் கிழித்துசுருட்டி வாயில் அடைத்துக் கொண்டு மென்று குதப்பினார்.

''நிக்கிறீங்களே... நீங்க இரண்டு பேரும் காப்பிபலகாரம் சாப்பிடுங்கோ போங்கோ.'' அதட்டிவிட்டு முற்றத்தில் இறங்கி, சாலகத்தின் அருகே சதக்கென்று வெற்றிலைச் சாற்றை உமிழ்ந்தார்.

அவரது அட்டகாசம், ஆர்ப்பாட்டம்... அசிங்கமான காரியங்கள் எல்லாவற்றையும் சந்தியா சகித்துக் கொண்டாள்.

அத்தை ஜகதாவின் மண்டை ஆவலில் வெடித்தது.

''குமரேசா... அந்தப் பிள்ளையாண்டான் நமக்கு உறவு போல நல்லா பழகுறான். நல்ல பிள்ளை. கொஞ்சம் பார்த்து நிதானமான விலையிலே காரை முடிச்சுக் கொடு...'' ஜகதா பேச்சை முடிக்கு முன் குமரேசன் வாய்க்குள் குதப்பிக் கொண்டிருந்த அத்தனை வெற்றிலையையும் முற்றத்தின் ஓரத்தில் துப்பிவிட்டு வாயைச் செம்பு நீரில் கொப்பளித்துக் கொண்டார்.

''நீங்க சொல்றுப்பல அவர் இனி நமக்கு உண்மையிலேயே உறவுக்காரரா ஆகிடப் போறார்'' —அட்டகாசமாகச் சிரித்தார்.

மகிழ்ச்சி உணர்வில் சந்தியாவின் மார்பு படபடவென்று துடித்தது.

''விவரமாச் சொன்னாக்கப் புரியும். புதிர் போடறியே...'' தலையை ஆட்டினாள் ஜகதா.

''என் ஒண்ணுவிட்ட தம்பிக்குத் தூரத்து உறவு மல்லிகாதியேட்டர் கட்டற நாகசாமி. அவருக்கு டவுனிலே ஒரு பெரிய ஸ்டீல் பாத்திரக் கடை இருக்கு. மொத்த வியாபார மரக் கடை ஒண்ணு. இன்னும் ஒரு விளம்பர நிறுவனம் வேறே இருக்கு... எக்ஸ்டென்ஷன்லே பெரிய பங்களா... இந்த வாலியண்ட் காரைத் தம் மகனுக்கு வாங்கியிருக்கார். — அவருக்கு ஒரு பென்ஸ் — ஒரு டொயாட்டா.. ஒரு அம்பாசிடர்னு மூன்றுக்கு மேற்பட்ட கார்கள் இருக்கு. பையன் மூத்தவன் — அடுத்தபடி இரண்டு பெண்கள் — லதா — சுதான்னு பேர். இரண்டு பெண்களுமே அழகா இருப்பாங்க. ரெண்டும் காலேஜில் பி.ஏ. படிக்கிறதுகள். மூத்தது — லதா சின்னதைவிட இன்னும் நல்ல நிறம். ஒரு பிடி உயரமா ஒடிசலா பார்க்க மூக்கும் முழியுமா ரொம்ப அழகாஇருக்கும். 'குமரேச நல்ல இடமாப் பார்த்து உதவுப்பான்னு நாகசாமி ரொம்ப நாளா தொந்தரவு செய்திட்டிருந்தான். அதுக்குத்தான் டாக்டர் ஸ்ரீதரனைப் பார்த்துப் பேசி முடிக்கலாம்னு வந்திருக்கேன்....'' என்று குமரேசன் கூறிக் கொண்டேபோகவும் சந்தியா வேதனை கவ்வ, திகைத்து உறைந்து போனாள்.

(தொடரும்)

**விடை:**



1. இ. வில்வப் பழம்
2. ஈ. நிலக்கடலை
3. அ. வெந்தயம்
4. ஆ. வெள்ளைப்பூண்டு
5. ஈ. வாழைப்பழம்
6. ஆ. முட்டைக்கோஸ்
7. அ. ''டி'' வைட்டமின்
8. இ. முள்ளங்கிக் கீரை
9. ஈ. சீத்தாப்பழம்
10. அ. பனங்கருப்பட்டி. இதன் திரவ வடிவமான பதநீருக்குக் 'கற்பகச் சாறு' என்றும் ஒரு பெயருண்டு. இதை யொட்டியே கற்பகக்கட்டி. கருப்பட்டி என்று ஆகியிருக்க வேண்டும்.

பத்தும் சரியானால் அற்புதம். 6 முதல் 9 — அருமை. 3 முதல் 5 — மகிழ்ச்சி. அதற்கும் கீழே — சோகம்.

# கா.கா.தே.கா. கலைகிறதா?

## அலசல்

**கா.**கா. தே. கா. கட்சி பிறந்த சில மாதங்களுக்குள் கிட்டத்தட்ட மூன்று லட்சம் தொண்டர்கள் வந்து சேர்ந்து விட்டனர். குமரி அனந்தனுக்கு எங்கு போனாலும் பிரம்மாண்டமான வரவேற்பு அளிக்கப் பட்டது.

வந்தது 1980 பாராளு மன்றத் தேர்தல். தனித்துப் போட்டியிடுவது என்று முடிவு செய்து களத்தில் இறங்கினார்கள் கா. கா. தே. கா.வினர். ஒரு இடத்தில் கூட வெற்றி பெற முடியவில்லை. ஜனதாவில் இருந்து இக்கட்சிக்கு வந்த இரு எம். எல். ஏக்களும் அ. தி. மு. க. விற்குச் சென்றுவிட்டனர். இதற்கு அவர்கள் சொன்ன காரணம் மூன்று. ஆனால் உண்மையான காரணம் கா. கா. தே. கா. தமிழ் நாட்டில் இனி எடுபடாது என்ற எண்ணம்தான். பிறகு வந்த சட்ட மன்றத் தேர்தலில் புத்திசாலித் தனமாக அ. தி. மு. க.வுடன் தேர்தல் கூட்டு வைத்துக் கொண்டார் குமரி. ஆறு எம். எல். ஏ.க்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். சட்ட மன்றத் தேர்தலுக்குப் பின் வந்த முதல் சரிவு பொதுச் செயலாளர் தென்னூர் தர்மராஜனின் விலகல். 'குமரி அனந்தனின் எம். ஜி. ஆர். ஆதரவுப் போக்கு தமக்குப் பிடிக்கவில்லை' என்று கூறி அவர் விலகினாலும் உண்மையான காரணம் வாக்களித்தபடி எம். எல். சி. பதவியை அவருக்குக் கொடுக்காமல் பெரிய தொழிலதிபர் ஒருவருக்குக் கொடுத்ததுதான் என்று பேசப்படுகிறது.

பிறகு சௌரிராஜன், எம். எல். ஏ. கா. கா. தே. கா.வின் தலைமையின் ஆணையை மீறி இந்திரா காந்தியை வரவேற்க விமான நிலையத்துக்கு இவர் போனதுதான் இவர் விலக நேர்ந்ததற்குக் காரணம் — என்கிறார்கள். ஆனால் ஹாஜா ஷெரீப் துருக்கி தூதர் பதவியையும் சட்ட மன்ற உறுப்பினர் பதவியையும் வைத்துக் கொண்டதைப் பற்றி சட்டமன்றத்தில் அனந்தன் பேசும்போது அதை எதிர்த்துப் பேசினாராம் சௌரிராஜன். இதனால்தான் விலக்கப் பட்டார் என்கிறார்கள்.

அதற்குப் பின் சொல்லரசு, லால்குடி ராஜேந்திரன், இந்திரகுமாரி, சிவா என்று பல தெரிந்த தலைவர்கள் விலகி விட்டனர். தீர்த்தராமன் எம். எல். ஏ. விலகலுக்குப் பிறகு ஆறாக இருந்த சட்ட மன்ற உறுப்பினர் எண்ணிக்கை நான்காயிது. விலகிய தீர்த்தராமனைச் சந்தித்தபோது அவர் கூறினார்: ''கா. கா. தே. கா.வில் யாருக்கும் சுதந்திரம் கிடையாது. குமரி அனந்தன் என்ன சொல்கிறாரோ அதன்படிதான் நடப்பார்கள். நாம் ஏதாவது கருத்தைச் சொன்னால் தலைவரை எதிர்த்துப் பேசுகிறான் என்பார்கள். எம். எல். ஏ.க்கள் யாரும் தனிப் பட்ட முறையில் மந்திரிகளையோ அல்லது முதல்வரையோ அவரது அனுமதி இல்லாமல் பார்க்கக் கூடாது என்று உத்தரவு போட்டார். சென்னையில் ஒரு முறை நாலரைக் கோடி மதிப்புள்ள பாமாயில் எண்ணெயைப் பதுக்கி வைத்திருந்ததாக ஒருவர் கைது செய்யப் பட்டார். அது பற்றிச் சட்ட மன்றத்தில் பேசக் கூடாது என்று தடை போட்டார். காந்தியப் பாதை அது இது என்கிறார்கள். விலகியவுடன் என்னை எம். எல். ஏ. ஹாஸ்டலின் முன்னால் அடித்தார்களே! இதுதான் காந்தியப் பாதையா?''

அனந்தனைச் சந்தித்தபோது அவர் கூறியதாவது:

''உழைப்பை ஒப்பி வந்தவர்களுக்குத்தான் இங்கு இடம். என்னுடைய தொண்டர்கள் கட்டுக்கோப்பாக என்னிடம்தான் இருக்கிறார்கள். கட்சியை விட்டு விலகிய சுய நலக்காரர்களுடன் எத்தனை தொண்டர்கள் போனார்கள்? அ. தி. மு. க.வுடன் கூட்டுச் சேர்ந்து வெற்றி பெற்றதால் துணை சபாநாயகர் பதவி வேண்டுமென்று விலகிய எம். எல். ஏ. ஒருவர் கேட்டார். இன்னொருவர் எம். பி. பி. எஸ். சீட் இரண்டு ஒதுக்கித் தருமாறு என்னிடம் கேட்கிறார். இதெல்லாம் எப்படிச் சாத்தியம் ஆகும்? கடைசியாக விலகிய எம். எல். ஏ. விலை கொடுத்து வாங்கப்பட்டிருக்கிறார். எங்கள் கட்சித் தொண்டர்களை ஹாஸ்டலின் முன் புறம் அவர்தான் முதலில் தாக்கினார்.''

—நமது நிருபர்


✱ குமரி அனந்தன்


✱ சௌரிராஜன்


✱ பி. தீர்த்தராமன்

# பொக்கிஷம் பொக்கிஷம்

அன்புள்ள கல்கி ஆசிரியருக்கு,

நான் பொக்கிஷமாகப் பாதுகாக்கும் கடிதத்தைக் 'கல்கி' வாசகர்களுடன் பங்கிட்டுக்கொள்ளும்படி எழுதியிருந்தீர்கள். எந்தக் கடிதத்தைத் தேர்ந்தெடுப்பது?

வேலை கிடைத்ததும் அப்பாவுக்கு ''நீங்கள் செய்ததை யெல்லாம் எப்படி என்னால் திருப்பி அளிக்க முடியும்?'' என்று உணர்ச்சி வசப்பட்டு நான் எழுதியதற்கு அவரிடமிருந்து, ''திருப்பி அளிக்க வேண்டாம். நான் செய்ததை உன் பிள்ளைகளுக்குச் செய்'' என்று வந்த சிக்கனமான பதில் கடிதத்தையா?

தேர்ந்தெடுத்த பெண்ணைத் தனக்கே உரிய வசீகரமான பிழைகளுடன் அம்மா வருணித்து எழுதியிருந்த கடிதத்தையா?

அச்சிட்ட தாளின் ஓரத்தில் ''அடிக்கடி எழுதுங்கள்'' என்று குறிப்பிட்ட எஸ்.ஏ. பி.யின் ஒரு வரி ஊக்கத்தையா?

'ராகவேணியம்' படித்துவிட்டு அமெரிக்க பி எச்டி எழுதிய நகைச்சுவைக் கடிதத்தையா?

'டியர்' என்று ஆரம்பித்து மனைவி, முதல் குழந்தை தவறிப்போனதைத் தெரிவித்த சோகத்தையா?

'செண்பகப் பூவு'க்குப் பிறகு விகடன் ஆசிரியர் அனுப்பி வைத்த நான்கு பக்க டைப் அடித்த நெருக்கத்தையா?

ஏன், நீங்களே 'ரோஜா'விற்குப் பிறகு எழுதிய விஸ்தாரத்தையா?

'காகிதச் சங்கிலிக'ளால் கண்ணீரில் நனைந்து வந்த கடிதங்களையா?

''நேற்று என் அப்பா இறந்துபோனார் ஆறுதலாக இரண்டு வரிகள் எழுதுங்களேன்'' என்று கேட்டு வந்த முகமறியா வருத்தத்தையா?

'கல்யாண்ஜி' வருஷத்துக்கு ஒரு முறை கறுப்பு மசியில் இறைக்கும் காட்டு மலர்களையா?

சிவப்பு கறுப்பு வெளுப்புக்குப் பிறகு நாடார் இளைஞர்கள் எழுதிய உருக்கங்களையா?

அண்ணனிடமிருந்து தமிழ் எழுத்தின் வரி வடிவங்களை ஆராயும் ஆழ்ந்த வரிகளையா?

பாலகுமாரனின் வீணை வாசிக்கும் குதிரை முகங்களையா? மாலனின் 'ஸ்நேகம்' மிகுந்த பாரதி கதைப் பாராட்டையா?

கஸ்தூரி ரங்கனின் உரிமையும் நட்பும் அவசரமும் நிறைந்த வரிகளையா?

பதிலுக்குக் காத்திராமல் எழுதும் ரகுநாதனையா? திருச்சியிலிருந்து நட்புக் குரல் விடுக்கும் ரவீந்திரன் தம்பதிகளையா?

'என் கண்ணே' என்று துவங்கும் சுப்புடுவையா?

இல்லை, மகா சிவராத்திரிக்கும் மகாநாடுகளுக்கும், பள்ளிப் பிள்ளைகளுக்கு நோட்டுப் புத்தகங்கள் வழங்குவதற்கும் கல்லூரி உல்லாசங்களுக்கும் ஏழைத் திருமணங்களுக்கும், பணக்கார விழாக்களுக்கும் என்னை அனுதினம் அழைக்கும் விருப்பங்களையா?

இந்தக் கடிதங்களில் எதுவும் இப்போது என்னிடம் இல்லை! அத்தனையும் என் ஞாபகத்தில் பதிந்து இருக்கின்றன.

அன்புடன்

— சுஜாதா

வண்ணப் படம்: உத்ரா

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani Layout Artist: Nambi Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

# இப்போது! இந்தியாவிலே!
## சிகப்பழகு தரும் உலகுபுகழ்க் கண்டுபிடிப்பு!
# கிளியர்·டோன்



சருமத் தெளிவுடன் சிகப்பழகு தரும் ஒரு சிறப்புப் பொருள் அடங்கியது.

கதிரொளி பட்டுக் கறுக்காமல் தடுக்கும் வெய்யில் மறிப்பு சாதனம் உள்ளடக்கம்.

மாசுமறு நீக்கும் விஞ்ஞான அமைப்பிலக்கணம் (ஃபார்முலா)

சரும நெகிழ்வுக்கான ஈரவளப்பச் சத்து இதில் மிகுதி

## பரிபூரண சிகப்பழகு சாதன க்ரீம்

கனவு பலித்தது! பொன்வண்ணம் மேனிமீது பூக்க— செவ்வேயழகு செழிக்க, இதோ **கிளியர்-டோன்** — பாரெங்கும் பல கோடி அழகு மாந்தர் பல நாட்டினர் வேளாவேளை பயன்படுத்தும் சிகப்பழகு க்ரீம்.

**கிளியர்-டோன்** —பன்னாட்டுலக மருந்தாராய்ச்சிப் பயனும்—விஞ்ஞான ஆக்கமுறைச் சிகப்பழகு க்ரீம்— இதனை இப்போது உங்களிடம் கொணருவோர் நிகோலஸ் லேபாரட்டரீஸ் இந்தியா லிமிடெட்.

சருமத் தெளிவுடன் சிகப்பழகு மலரவைக்க கிளியர்டோன் க்ரீமில் இருப்பதென்ன— இந்தியாவில் கிடைக்கின்ற வேறெந்த க்ரீமிலும் இல்லாத ஒரு சிறப்புப் பொருள்: பலநாட்டுலகிலும் ஏற்புப் பெற்ற ஃபார்முலா.

இயற்கையோடு இயற்கையாய்ச் செயல்படும் **கிளியர்-டோன்** அழகு 'செப்பாக்குது' உங்கள் மேனியை. நீக்குது மாசுமறுக்களை. க்ரீம் இதன் விஞ்ஞான அமைப்பிலக்கணமோ, சூரிய ஒளியிலுள்ள கேடான அல்ட்ரா — வயலெட் கதிர்களை உடம்பின் மேல் பட விடாமல் தடுத்துக் காத்திடுகிறது மேனி கறுக்கா வண்ணம். அதோடல்ல, உங்கள் சருமத்திற்குத் தேவைப்படும் மழமழ ஈரத் தளதளப்பை வரவழைக்குது **கிளியர்-டோன்**. பளிச் வண்ணமாறுதல்— வேளை தவறாமல் 6 வாரம் **கிளியர்-டோன்** உபயோகிக்கும் பலன்கள் ஓகோ பார்த்துப் பூரித்தே போவீர்கள்!



பலநாட்டுலகிலும் புகழ்பெற்றது

புதிது





உயரிய ஃபார்முலா, ஓங்கிய சக்தி

சிகப்பழகு ரகசியம்— இயற்கையாய் உமக்கே. **கிளியர்·டோன்**
லண்டன் · பாரிஸ் · நியூயார்க்.

daCunha/NICL/3/81-TM